# காப்பியக் கதைகள்

ஏழாம் புத்தகம்



வளையாபதி

குண்டலகேசி

நீலகேசி



சு. அ. இராமசாமிப் புலவர்

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்
கீழத் தேர்த் தெரு, திருநெல்வேலி. & 1/140, பிராட்வே, சென்னை 1

கழக வெளியீடு: ௯௨௨

# காப்பியக் கதைகள்

(ஏழாம் புத்தகம்)




வளையாபதி

குண்டலகேசி

நீலகேசி




ஆசிரியர்:

சு. அ. இராமசாமிப் புலவர்




:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
திருநெல்வேலி :: சென்னை 1.

# பதிப்புரை

மாணவர்களுக்குக் கதைகளில் விருப்பம் அதிகம். இனிய தமிழ் நடையில் அமைந்து விளங்கும் சுவையான கதைகள் அவர்கள் ஆவலை நிறைவேற்றுவதுடன் தமிழ்மொழி யறிவையும் வளர்க்கின்றன.

தமிழ் மொழியிலுள்ள காப்பியங்கள் ஒவ்வொன்றும் சுவையான பல்வகை நயங்களும் நிறைந்தவை. அவற்றைக் கற்று இளமாணவர் பயன்பெறுவதுடன் தமிழ்மொழியில் நல்ல தேர்ச்சியும் ஆர்வமும் கொண்டு விளங்கக் காப்பியக்கதைகளை எளிய இனிய தமிழ்நடையில் வெளியிட எண்ணினோம்.

இவ்வரிசையில் சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி, உதயணன், நரவாணன், திவிட்டன், யசோதரன் ஆகியவை முன்னர் வெளிவந்தன. தற்போது வளையாபதி, குண்டலகேசி, நீலகேசி மூன்றும் கொண்ட இப்புத்தகம் வெளிவருகின்றது.

வளையாபதி குண்டலகேசி ஆகியவை முழுமையும் கிடைக்கப் பெறாததனால் கதைத்தொடர்பையறிய இயலவில்லை. பழைய உரை யாசிரியர்கள் மேற்கோள்களாக எடுத்துக்காட்டிய சில அறநெறிச் செய்யுட்களிலிருந்தும், வழக்கிலுலவும் குறிப்புக்களினின்றும் இவ் வரலாறுகள் ஒருவாறு விளக்கப்பெற்றுள்ளன. நீலகேசியின் பெரும் பாலான பாடல்கள் திரட்டப்பட்டுள்ளமையின் அவ்வரலாறு ஓரளவு தெளிவாகவே எழுதப்பட்டுள்ளது.

திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள் இவ்வரலாறுகளை எழுதித் தந்துள்ளனர். கதைகளை விளக்கும் ஓவியங்களும் அங்கங்கே இடம் பெற்றிருக்கின்றன.

மாணவர்களும், ஆசிரியர்களும், பொதுமக்களும் இந்நூலை நன்கு வரவேற்பார்கள் என்று நம்புகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# பொருளடக்கம்



அறங்கூறு மன்றத்தில் வைரவாணிகனும் அவன் மனைவியரும் [பக்கம் 28]

# வளையாபதி

## கடவுள் வணக்கம்

உலகம் மூன்றும் ஒருங்குடன் ஏத்துமாண்
திலகம் ஆய திறல்அறி வன்அடி
வழுவில் நெஞ்சொடு வாலிதில் ஆற்றவும்
தொழுவன் தொல்வினை நீங்குக என்றியான்.

### காவிரிப்பூம்பட்டினம்

காவிரிப்பூம்பட்டினம் பழங்காலத்து நகரங்களில் ஒன்று. அது பழந்தமிழ் மன்னர்களின் தலைநகரமாகவுஞ் சிறந்து விளங்கியது. சிலப்பதிகார நிகழ்ச்சியின் முற்பகுதி இப்பட்டினத்தில்தான் நிகழ்ந்தது. கடற்கரையை ஒட்டி விளங்கும் நகரங்கள் பட்டினங்கள் என்று உரைக்கப்பெறும். மணிமேகலை நூலின் தலைவியாகிய மணிமேகலையும் இந் நகரில்தான் பிறந்து வளர்ந்து சிறந்து விளங்கினாள்.

### நாராயண செட்டி

இந்தக் காவிரிப்பூம்பட்டினத்திலே ஒரு செட்டியிருந்தான். அவன் பெருஞ் செல்வம் படைத்தவன். வைர வாணிகத்தொழிலை மேற்கொண்டு மேலும் பெருஞ் செல்வந்தேடினான். அவனுடைய செல்வம் ஒன்பது கோடி வெண்பொற்காசுகள். அவனுடைய இடுகுறிப்பெயர் நாராயணன். மக்கள் அவனுடைய பெயரை 'நவகோடி நாராயண செட்டி'என்று வழங்கினார்கள்.

வளையாபதி

நாராயணசெட்டி பெரும்பிடிவாதக்காரன். யார் என்ன சொன்னாலும் அதைக்காதிலே வாங்கமாட்டான். தன் மனம் போனவாறுதான் எதையுஞ் செய்வான். துரியோதனன் எத்தகைய பெரியோர்களையும் ஒரு பொருட்படுத்தி வணங்கமாட்டான். அதனால் அவனுக்கு 'வணங்காமுடி மன்னன்' என்று பெயருண்டாயிற்று. அதைப்போல நாராயண செட்டிக்கு, 'வளையாபதி' என்று ஒரு காரணப்பெயர் உண்டாயிற்று. இப்பெயர் இரண்டாவது மனைவியின் வேண்டுகோளுக்கு இணங்காதபடியினாலே பின்னாளில்தான் உண்டாயிற்று என்பர்.

நாராயண செட்டியின் இயல்புகள்

வளையாபதியாகிய நாராயண செட்டி வைர வாணிகத்தொழிலை மேற்கொண்டிருந்தபடியால் அவனுடைய பெயர் பெரும்பாலும் 'வைர வாணிகன்' என்றே வழங்கிநின்றது. இந்தக்காலத்திலும் பலருடைய பெயர், அவர்கள் செய்யும் வணிகத்திற்கேற்பக், 'காசுக்கடைச் செட்டியார், மளிகைக்கடைச் செட்டியார்' என்று வழங்கி வருகிறதைக் காண்கிறோமல்லவா? நம் நாராயண செட்டியின் வகுப்பினரே இக்காலத்து நாட்டுக்கோட்டைச் செட்டியார்களாவர். நம் வளையாபதி வணிகத் துறையில் ஒரு தம்படியையும் விட்டுக்கொடான். தருமம் என்று கூறி அவனிடம் பொருளைப் பெறலாம். ஆனால், கடன் என்று கூறி வாங்கியதை மட்டும் அவனிடம் ஏமாற்ற முடியாது. திருக்கோயிலுக்குத் திருப்பணி புரிதல், வறிஞர்கட்கு உணவளித்தல், ஆகியவைகளிலே வளையாபதி மிகுந்த பற்றுள்ளங்காட்டிப் பல தருமங்கள் புரிந்தான்.

அந்தரி

வளையாபதிக்குத் திருமணம் நடைபெற்றது. மனைவியின் பெயர் அந்தரி. அந்தரியும் வளையாபதியும் நீண்டநாட்கள் இல்லறத்தை இனிது நடத்தினர்கள். பெரும் பொருட் செல்வர்களாகிய அவர்கட்கு மக்கட் செல்வம் வாய்க்கவில்லை. மக்கட் செல்வம் இல்லா விட்டால் இல்லறவாழ்வு மகிழ்ச்சியை அளிக்காது. அவ் வுண்மையை வளையாபதி அறிந்தான். அந்தரி மலடியாக இருக்கக்கூடும் என்று எண்ணிக்கொண்டிருந்தான்.

மதுரையில் மறுமணம்

வளையாபதிக்கு மறுமணஞ் செய்துக்கொள்ள நோக்கம் இருந்தது. ஆயினும், தன்னுடைய மனைவி மறுமணத்திற்கு இணங்கமாட்டாள் என்று எண்ணி அஞ்சிக்கொண்டிருந்தான். வாணிகத்தின்பொருட்டு மதுரைக்குச் சென்முன். நண்பன் ஒருவனுடைய இல்லத்திலே தங்கினுன். அந்நண்பன் வேளாள குலத்தினன். பிறர்க்கு வேளாண்மை செய்வதினுஞ் சிறந்தவன். அந்த வேளாளனுக்கு மகள் ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெயர் பத்தினி. அழகிற் சிறந்தவள்; கல்வியறிவு பெற்றவள்; அவளைக் கண்டதும் வளையாபதியின் உள்ளத்தில் காதல் தோன்றியது.

முன்னரே மறுமணஞ் செய்துகொள்ள எண்ணிய வளையாபதி, பத்தினியை மணஞ்செய்து தரும்படி வேண்டினுன். மகப்பேறின்மையால் தான் இரண்டாவது மணம் புரிந்துகொள்ள எண்ணுவதாகக் கூறினுன். வளையாபதி நண்பனுக இருந்ததன்றிப் பெருஞ்செல்வனுகவும் இருந்தமையால் வேளாளன் இணங்கினுன். நன்னுள் ஒன்றில் பெருஞ் சிறப்புடன்

திருமணம் நடைபெற்றது. இருவருஞ் சின்னுள் அங்கு வாழ்ந்திருந்தனர். பிறகு காவிரிப்பூம்பட்டினத்தை யடைந்தனர்.

பத்தினி சூல்கொள்ளுதல்

வளையாபதி மறுமணஞ் செய்துகொண்டு வந்ததைக் கண்ட அந்தரி வயிறு எரிந்தாள். வளையாபதி தனி வீடு ஒன்றை இளையாளுக்கு அமைத்துக்கொடுத்தான். பத்தினி அவ்வீட்டில் இல்வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தாள். இரு மனைவியரையும் ஒரே வீட்டில் வைத்தால் இருவருக்கும் பெரும் போராட்டம் ஏற்படும். அவ்வாறு ஏற்படாமலிருப்பதற்காகவே வளையாபதி தனிவீடு அமைத்தான். காலப்போக்கில் பத்தினி சூல்கொண்டாள். அதனை யுணர்ந்து வளையாபதி மகிழ்ந்தான்.

மூத்தாள் பொருமை

ஒருவருக்கு மகிழ்ச்சியை உண்டாக்கும் நிகழ்ச்சியே மற்ெருருவருக்குத் துன்பத்தை யுண்டாக்கும். இஃது உலகில் இயற்கை. பத்தினி சூல் கொண்டுள்ளதை யுணர்ந்த அந்தரி பொருமைத் தீயால் எரிக்கப்பட்டாள். அவளுக்கு அதற்குமேலும் பொறுக்க முடியவில்லை. இளையாளுக்கு எவ்வகையிலேனும் தொல்லை விளைவிக்க வேண்டும் என்று முடிவு செய்தாள். தன்னுடைய தோழிகளையெல்லாங் கலந்து எண்ணினுள். ‘இளையாள் பிள்ளை பெற்றுவிடுவாளானுல் பிறகு அவளை ஒன்றுஞ் செய்யமுடியாது. இப்போதே அவளை வீட்டைவிட்டுத் துரத்துவதற்கு வழி தேடவேண்டும்’ என்று பலரும் அந்தரிக்குச் சூழ்ச்சி சொல்லிக்கொடுத்தனர்.

அந்தரி கலாம் விளைத்தல்

அந்தரி தன்னுடைய கணவன் மனத்தைக் கலைப்பதற்குப் பெரும் முயற்சிசெய்தாள். 'பத்தினியினுடைய குலம் தாழ்ந்தது. தாழ்ந்த குலத்தவளை வீட்டிற் சேர்த்துவைத்திருப்பது, நமது செட்டிக்குலத்தினுடைய பெருமைக்குச் சிறுமையாகும். தாழ்ந்த குலத்தவளுக்குப் பிறக்கும் பிள்ளையை, நம்முடைய செட்டிச் சாதியிற் சேர்க்கக்கூடாது. சேர்த்தால் நம் குலத்தினர் நம்மைச் சாதியைவிட்டு விலக்கிவிடுவார்கள்' என்று பலவாறு கூறி வளையாபதியினுடைய மனதைக் கலைத்தாள். ஊரார் பலரிடமும் தூற்றினுள்.

அந்தரிக்கு ஓர் அண்ணன் இருந்தான். அவன் ஒரு குரங்கன். குறும்புகள் செய்வதில் அவனுக்கு நிகர் அவன்தான். அவனுடைய பெயர் சாத்தன். அவன் செய்யும் வேலைகள் குட்டிச்சாத்தான் வேலைகளாகவே யிருக்கும். அவன் தன் குலத் தொழிலுக்கு ஏற்பப் பொருள்தேடுந் துறையில் ஈடுபடவில்லை. அழிக்குந் துறையில்தான் ஈடுபட்டிருந்தான். அந்தரி அந்த அண்ணனைக் கொண்டுங் கலாம் விளைத்தாள். அவன் வளையாபதியாகிய தன் மைத்துனனைக் கண்டு, 'என் அக்காள் உயிருடன் இருக்கும்போது நீர் வேருெரு குலத்திற் பிறந்த பெண்ணைத் திருமணஞ்செய்து எப்படி வீட்டிற் கொண்டுவந்து சேர்க்கலாம்? நீர் அவளை உடனே வீட்டைவிட்டு விரட்டாவிட்டால், நான் கலாம் விளைத்து, உம்மைச் செட்டிக் குலத்தில் நின்றுந் தள்ளி விடுமாறு ஏற்பாடுசெய்வேன். உடனே நம்முடைய குலத்தார்களின் கூட்டத்தைக் கூட்டுமாறு சொல்லுகிறேன்' என்ருன். சாத்தன் பொல்லாதவனுகையால்

ஏதேனும் இடர் விளைவிப்பான் என்று வளையாபதி எண்ணினான். மைத்துனன் கூறியவைகளைக்கேட்டு, 'நான் இளையாளை வீட்டைவிட்டுப் போகச் சொல்லி விடுகிறேன்; நீ பேசாமலிரு' என்றான்.

சூழ்ச்சி

அந்தரியும் அவள் அண்ணனும், வளையாபதி மனம் முற்றிலும் மாறுபடும்படியாக மற்றும் பல வேலைகள் செய்தனர். மருத்துவர் சோதிடர் முதலியவர்களை யழைத்தனர். அவர்களுக்குக் கைக்கூலி கொடுத்தனர். 'அந்தரிக்கு மகப்பேறு உண்டாகக்கூடிய ஊழ் இன்னும் இருக்கிறது. அவள் விரைவிற் சூல்கொண்டு மகனைப் பெறுவாள்' என்று வளையாபதியிடங் கூறும்படி செய்தனர். மருத்துவர்களுஞ் சோதிடர்களும் அவ்வாறே வளையாபதியினிடமுங் கூறிப் பொருள் கவர்ந்து கொண்டு சென்றனர்.

ஒரு விலைமகள்

சாத்தனுக்கு ஒரு விலைமகள் இருந்தாள். அவள் ஏமாற்றுவேலைகள் செய்வதிற் கைதேர்ந்தவள். அவள் சூல் கொண்டிருந்தாள். அந்தச் சூலிற் பிறக்கும் பிள்ளையை அந்தரிக்குக்கொடுத்து அந்தரி பெற்ற பிள்ளை யென்று பேர்செய்து விடுவதென்றும் ஏற்பாடு செய்தனர். அந்தரி சூல் கொண்டிருப்பதுபோற் பாசாங்கு செய்துகொண்டு வீட்டிற்குள்ளே அடங்கியிருப்பதென்றும் முடிவாயிற்று. அந்தரி சூல் கொள்வாள் என்று வளையாபதி உறுதியாக நம்பினான். அந்தரி பிள்ளை பெறுவாள் என்று நம்பியவுடன் இளையாளை வெறுக்கத் தொடங்கினான்.

பத்தினி வெளியேற்றம்

ஒருநாள் வளையாபதி இளையாள் வீட்டிற்குச் சென்றான். இளையாள் அன்புடன் வரவேற்றாள். வளையாபதி பத்தினியைப் பார்த்து, 'நீ இந்த வீட்டைவிட்டு உடனே புறப்படவேண்டும். உன்னால் எனக்கு என்னுடைய குலத்தாரின் பகை வளருகிறது. நானோ உயர்ந்த செட்டி வகுப்பிற் பிறந்தவன். நீயோ எங்கள் வகுப்பைவிடத் தாழ்ந்த வேளாளவகுப்பிற் பிறந்தவள். அவ்வாறாக நம் இருவருக்கும் எவ்வாறு தகுதியாகும்? உன்னை நான் உடனே வீட்டைவிட்டு வெளியேற்றாவிட்டால், என் வகுப்பார்கள் என்னைக் குலத்தைவிட்டுத் தள்ளிவிடுவார்கள்போல் தெரிகிறது. நான் பிள்ளையில்லாக் குறையினால்தான் உன்னை மதுரையில் மணஞ்செய்தேன். இப்போது என்னுடைய மூத்த மனைவி, இனிமேல் பிள்ளை பெறுவாள் என்று தெரிகிறது. எனது செல்வம் குல மனைவி பெறும் பிள்ளைக்குத்தான் உரியதாகுமே தவிர, நீ பெறும் பிள்ளைக்கு உரியதாகமாட்டாது' என்றான்.

கணவன் கூறியதைக்கேட்ட மனைவி கலங்கினாள். "கணவரே! பதறாதீர்; என்னை வீட்டைவிட்டு விரட்டுவதற்கு நான் யாது தவறுசெய்தேன்? இன்று வரை நம்முடைய வாழ்வு இன்பமாகத்தானே நடைபெற்றுவந்தது. திடீரென்று உமக்கு இவ்வாறு மனந் திரியக் காரணம் யாது? இரண்டு மனைவியர் பிள்ளை பெறுவது தவறா? மேலும், நீங்கள் உயர்ந்த குலம் என்றும், நான் தாழ்ந்தகுலம் என்றும் பேசுகிறீர்களே. மதுரையில் திருமணஞ் செய்துகொண்டபோது நீங்கள் என் குலத்தின் உயர்வு தாழ்வுகளைப் பார்க்கவில்லை? நீங்கள் என்னை என்றும் வைத்துப் பாதுகாப்பீர்கள்

என்று நம்பித்தானே என் தந்தையார் மணஞ்செய்து வைத்தார். 'காரியம் ஆனபிற்பாடு காலைவாரிவிடுதல் போல' என்னை விரட்டப் பார்க்கிறீர்களே! இது தகுதியாகுமா? என் வயிற்றெரிச்சல் வீண் போகுமா?" என்று மொழிந்தாள்.

பத்தினி கூறியதில் உண்மை இருப்பதை வளையாபதி உணர்ந்தான். 'நான் உன்னை மதுரையில் மணந்து கொண்டது தவறுதான். அத்தவற்றின்பொருட்டு உனக்குத் திங்கள்தோறுஞ் செலவுக்குப் பொருள் தந்து விடுகிறேன். தங்கியிருப்பதற்கு ஒரு வீடுந் தருகிறேன்' என்றான்.

பத்தினிக்குச் சினம் மூண்டது. "நான் நீர் தருகிற வீட்டிற்காகவும் பொருளுக்காகவும் உம்மைப் பின் தொடர்ந்து வரவில்லை. இன்று செல்வனாக இருப்பவன் நாளை வறியவனாவான். இன்று வறியவனாக இருப்பவன் நாளைக்குச் செல்வனாவான். உலகப்பொருள்கள் எல்லாம் அழியுந்தன்மையுடையனவேயன்றி, அழியாப் பொருள்கள் ஒன்றும் இல்லை. நீர் என்னைக் காதலித்து மனத்தைப் பறிகொடுத்தமையால்தான் நான் உம்மை மணந்தேன். நான் என்னுடைய குலத்தினரை மறந்து உம்மை மணந்து பின் தொடர்ந்தது தவறு என்று, இப்பொழுது உணருகிறேன். நமது வாழ்க்கைப் பயனாகிய மக்கட் பேறு வாய்த்துள்ளகாலையில், என்னை வெறுத்தகற்றுகிறீர்! இதன் பயனை நீர் அடைவீர். உம்முடைய மனந் திரிந்ததற்குக் காரணம் பொறாமைப்பேயும் குலச் செருக்கும் என்பதை நான் நன்குணர்வேன். இன்னும் உம்மை ஒரு கேள்வி கேட்கிறேன். ஓர் ஆடவன் தீயின் முன்னர் மணந்த மனைவியைச் சூல்கொண்டிருக்கும் போது துறப்பது அறமாகுமா? என்னிடத்திலும்

எனது குலத்திடத்திலும் நீர் என்ன குற்றத்தைக் கண்டு விட்டீர்? என்னுடைய குலம் உம்முடைய செட்டிக் குலத்தைவிட எவ்வகையில் தாழ்ந்துபோய்விட்டது? என்னுடைய குலம் உம்முடைய குலத்தைப்பார்க்கினும் உயர்ந்ததாகுமே தவிரச் சிறிதுந் தாழ்ந்ததாகிவிடமாட்டாது. என்னுடைய குலத்திற்குத் தவறு கூறுபவர்களை இங்கு அழையும் பார்க்கிறேன்'' என்றாள்.

வளையாபதி எதற்கும் வளைந்துகொடாதவனாக இருந்தான். 'நீ யாதுகூறினுங் கூறுக; நான் இனிமேல் உன்னை வைத்துக்கொண்டு வாழ்க்கை நடத்தப்போவதில்லை' என்றான்.

பத்தினி வளையாபதியினுடைய பாதுகாப்பிலும் செலவிலும் இருந்து வாழவிரும்பவில்லை. கைகளின் கண் கிடந்த வளையல்களை உடைத்தெறிந்தாள். வீட்டை விட்டுப் புறப்பட்டாள். வளையாபதி துணையனுப்புவதாகக் கூறியதையும் ஏற்றுக்கொள்ளவில்லை. இன்ன இடஞ்செல்வது என்று முடிவுசெய்து கொள்ளவுமில்லை. மதுரையை எரித்த கண்ணகி, கால் சென்றவழியே சென்றதுபோல் பத்தினியும் சென்றாள். அவளுடைய மனநிலை, நடுக்கடலிற் செல்வோர் மரக்கலம் அழிந்த காலை எய்தும் நிலையை அடைந்துநின்றது.

அந்தரியும் வளையாபதியும்

சூல் கொண்ட இளையாள், வீட்டைவிட்டுப் புறப் பட்டதும் மூத்தாளுக்கு உள்ளங்குளிர்ந்தது. பிறருடைய அழிவைக்கண்டு மனம் மகிழ்பவர்களையும் இவ்வுலகம் பெற்றிருக்கின்றதன்றோ? பல பசப்பு மொழிகளைக்கூறி அந்தரி வளையாபதியை வளைத்துத் தழுவிக்கொண்டாள். 'உமக்கு ஏற்பட்ட ஒரு பெரியகுறை இப்பொழுது நீங்கி

விட்டது. இனிமேல் உம்மீது தவறு சொல்பவர்கள் யாரும் இரார். நீர் செய்தது தகுதியான செயலாகும். என்னுடைய அன்பரே! ஆருயிர்க்காதலரே! இன்ப வடிவமானவரே! ஈசன் அருளால் நாம் இனி நல் வாழ்வு பெறுவோம். தாங்கள் சிலநாள் தங்கியிருந்து விட்டுப் பிறகு வாணிகத்திற்குச் செல்லுங்கள். திரும்பி வந்ததும் வீட்டிலே குழந்தையைப் பார்ப்பீர்கள். நான் பெறும் மகனுக்கு அழகன் என்று பெயரிடப் போகி றேன்' என்ருள்.

அந்தரியும் வளையாபதியும் சிலகாலம் மகிழ்ந்திருந் தனர். முன்னேற்பாடாகச் செய்திருந்த சூழ்ச்சியின்படி மருத்துவரும் பிறரும் வந்து அந்தரியைப் பார்த்தனர். 'சூல்கொண்டிருக்கிருள்' என்று வளையாபதியினிடங் கூறினர். தகுந்தவாறு பொருள் கொள்ளையடித்துக் கொண்டு சென்றனர். அந்தரி உண்மையிலேயே பிள்ளை பெறுவாள் என்று வளையாபதி உறுதியாக எண்ணி விட்டான். வாணிகத்தின் மேற்செல்ல எண்ணினன். மரக்கலமேறி வெளிநாடுகட்குச் சென்ருன்.

சாத்தன் கூத்தும் முத்தாள் நடிப்பும்

வளையாபதி மரக்கலமேறிப் புறப்பட்டதும், சாத் தன் தன்னுடைய அக்காள் வீட்டிலேவந்து தங்கினன். பொருள்களை வாரிச் செலவிட்டு மனம் போனவாறு கூத்தடித்தான். அந்தரி தான் சூல்கொண்டிருப்பதாக அனைவருக்குந் தம்பட்டமடித்தாள். தங்களுடைய கேலிக்கூத்து வெளிப்பட்டுப் போகாமல் விட்டிற் குள்ளே அடங்கியிருந்தாள். உலகத்திற்குப் பெயர் பண்ணுவதற்காக, மருத்துவர் சிலரைச் சாத்தன் அழைத்து, மருத்துவஞ் செய்வதுபோற் பாசாங்கு செய்தான்.

மலடி மகப்பேறுதல்

சாத்தனுடைய காதற்கிழத்திக்குத் திங்கள்கள் பத்தும் நிறைந்தன. அவள் ஒரு குழந்தையைப் பெற்ருள். அந்தரியும் அவள் அண்ணனும் விரும்பி நின்றபடி அஃது ஆண் குழந்தையாகவே இருந்தது. அக்குழந்தையை எவரும் உணராவண்ணம் அந்தரியிடத்திற் கொண்டுவந்து சேர்த்தனர். அந்தரி தான் மகப்பேறு பெற்றுவிட்டதாக நடித்துக்கொண்டு சிலநாள் படுத்திருந்தாள். விலைமகள் வயிற்றில் தோன்றிய அக்குழந்தைக்கு அந்தரி பலவகைச் சிறப்புக்கள் செய்தாள். அணிகலன்கள் பூட்டினுள். அழகன் என்று பெயரிட்டாள். 'கண்ணே! காதே! மூக்கே!' என்று கொஞ்சினுள்.

வளையாபதி மகனைக் காண்டல்

குழந்தை விலைமகளுக்குப் பிறந்ததாகையால், அழகாக இருந்ததேயன்றி நற்குணமுடையதாகவில்லை. குழந்தை வளரவளர அதன் தீக்குணங்களும் வளர்ந்தன. வாணிகத்தின் பொருட்டு வெளிநாடு சென்றிருந்த வளையாபதி திரும்பிவந்தான். மகனைக்கண்டான். தனக்கும் ஒரு மகன் பிறந்துவிட்டான் என்று மகிழ்ச்சி கொண்டான். அந்தக் குழந்தைக்குச் செய்யவேண்டிய சடங்குகளையெல்லாம் காலாகாலத்திற் செய்தான். அக்குழந்தை அவனுடைய வயிற்றில் தோன்றியதல்லவாகையால்' அதனிடத்தில் வளையாபதிக்கு உண்மையான அன்பு தோன்றவில்லை.

அழகன் ஆட்டம்

அழகன் பேசுவதற்கு அறிந்தவுடன், வளையாபதியையும் பொய்த்தாயையும்வாய்க்குவந்தபடி வைதான்.

அவனுக்கு அகவை முதிரமுதிர அவன் செய்யும் அல்லல்களும் மிகுந்தன. விலைமகளுடைய தீக்குணங்களெல்லாம் அவனுக்கு நிலையாக அமைந்தன. தகுந்த இளமைக் காலத்தையடைந்ததும் தீய ஒழுக்கங்களை மேற்கொண்டான். வீட்டில் இருந்த பொருள்களை வாரி விலைமகளிருக்குக் கொடுத்தான். தீயோர்களுடைய நட்பையே பற்றி நின்றான்.

அழகனுடைய இழிவு வளையாபதிக்குப் பெருந் தொல்லையாக முடிந்துவிட்டது. அழகனைப் பலவாறு வைதான். 'நீ யார்பெற்ற மகன்? இவ்வாறு கொடியோனாக இருக்கிறாய்?' என்று கேட்டான். அழகனுடைய போக்கால் அந்தரிக்கும் வளையாபதிக்கும் அடிக்கடி பேச்சுக்கள் வளர்ந்தன. வளையாபதி உடல் வளைந்து தொல்லைப்பட்டுத் தேடிய பொருள் பலவாறு கரைந்து கொண்டிருந்தது. மைத்துனனாகிய சாத்தன் ஒரு பக்கத்தில் அல்லல் கொடுத்துக்கொண்டிருந்தான். இதனால் அமைதியற்றதாக முடிந்தது வளையாபதியினுடைய வாழ்க்கை. அந்தோ 'சூல்கொண்டிருந்த பத்தினியை வீட்டைவிட்டு விரட்டியதன் பலன்தான் இவ்வாறு வந்து விளைந்ததுபோலும்' என்று வருந்தினான். பத்தினி என்னவானாளோ என்னும் எண்ணம் ஒருபால் அவனை வாட்டியது.

காளிகோயில்

வீட்டைவிட்டுப் புறப்பட்டுத் தனியாகச் சென்ற பத்தினி என்னவானாள் என்று பார்ப்போம். வீட்டை விட்டுத் தனியே சென்ற அவள் காடுகளையும் மலைகளையுங் கடந்து பொழுதுபோகும் வரையில் நடந்தாள். ஓரிடத்தில் காளிகோயில் ஒன்று இருந்தது. அந்தக்

காளிகோவிலையடைந்தாள். அக் காளிதேவியின் அடிகளில் அடியற்ற மரம்போல் வீழ்ந்தாள். 'தாயே! நான் யாருமற்றபாவி! எனக்குத் தாயும் தந்தையும் கணவனும் மற்றெல்லாப் பொருளும் நீதான். உன்னையே யான் அடைக்கலமாக அடைந்தேன்' என்று கதறினாள். காளி தேவியைக் கைகுவித்துத் தொழுதாள். ஒரு மூலையில் காளிதேவியை எண்ணிக்கொண்டு அமர்ந்தாள்; அவளுடைய மனம் பலவாறு வருந்தி நொந்திருந்தது; தன்னுடைய நல்வாழ்வுக்கேற்பட்ட இடையூற்றை எண்ணி வருந்தினாள்; தன்னுடைய முடிவு யாதாகமுடியுமோ என்று எண்ணி ஏங்கினாள்; தன் அல்லலை அகற்றுமாறு காளியை வேண்டினாள். என் துன்பத்தை அகற்றாதொழிவையாயில், உன் அடிமலர்களில்தானே என்னுடைய இன்னுயிரைப் போக்கிக்கொள்வேன்' என்று கூறிச் சோர்ந்து கண்ணுறக்கங்கொண்டாள். திக்கற்றவளாக இருந்த அவளுடைய நிலைமை பெரிதும் இரங்கத் தக்கதாக விருந்தது.

காளிதேவியின் அருள்

பத்தினியின் கனவிலே காளிதேவி தோன்றினாள். 'குழந்தாய்! உனது துன்பம் நீங்கிவிடும்; நீ இல்லறமாகிய பொல்லாத அறத்திலே அடைந்த அல்லலும் நீங்கிவிடும். நின் அல்லல்கள் அகன்று நீ நல்வழிப்படுதற்கே நினக்கு இத்தகைய பிரிவுநிலை யேற்பட்டது. காலையில் ஒரு தவமூதாட்டி இங்குவருவாள். அவளுடைய பெயர் ஔவை. அவள் மெய்யறிவு கைவரப்பெற்றவள்; அவள் நினக்குப் புகலிடந்தந்து நின்னை யழைத்துச் செல்வாள்; நீ ஓராண்குழந்தையைப் பெறுவாய்; அம்மகன் நினது மனத்துன்பத்தை மாற்றிவிடுவான்' என்று கூறி மறைந்தாள்.

ஔவையார் காட்சி

மறுநாள் பொழுது விடிந்தது. பத்தினி தான் கண்ட கனவினை எண்ணி மனக்கவலை தீர்ந்திருந்தாள். கோயிலுக்குமுன் ஒரு குளம் இருந்தது. அக்குளத்தில் நீராடினுள். தேவியைப் போற்றி வழிபட்டாள். தேவிக்குமுன் அமர்ந்து தேவியை எண்ணி வழிபட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது அங்கொரு தவ மூதாட்டி வந்தாள். அவள் தன்னுடைய வழக்கப்படி தேவியைப்போற்றி வழிபடவந்தாள். அவளுடைய உடை வெண்மையாக மிளிர்ந்தது; கண்களில் அருட் பெருக்கு வழிந்தது; முகத்தில் அறிவுச்சுடர் வீசியது; அவள் பார்வைக்கு முதியவள்போலக் காட்சியளித் தாலும்' அகவையில் இளமையுடையவளாகவே இலங்கி னுள். அந்த மாது உலகப்பற்றுக்களை முற்றவுந் துறந்த வள். அம்மூதாட்டியைப் பத்தினி கண்டாள்.

பத்தினி ஔவையிடம் அடைக்கலமாதல்

இரவிற் காளிகாதேவி அருள்புரிந்த அம்மையார் அம்மூதாட்டியாகவே இருக்கக்கூடும் என்று பத்தினி எண்ணினுள். அத் தவமகளைப் போற்றி வணங்கினுள். அத்தவமகள் உலகவாழ்க்கையில் நன்கு அடிபட்டவள். எதற்கும் பதறும் இயற்கையுடையவள் அல்லள். செத்தபிணம் எழுந்து நடந்தாலுங்கூட அவள் அதனை ஒருபொருட்படுத்தமாட்டாள். அவ்வளவு தொலைக்கு அவளுடைய மெய்யறிவு வளர்ச்சிபெற்றிருந்தது. “பொன்றினசவம் வாழ்ந்தாலும் புதுமையா ஒன்றும் பாரார், நன்று தீதென்னுர் நோக்கார் நடுவான சீவன் முத்தர்,” என்பது பெரியோர் வாக்கல்லவா? அத்தவ மகள் பத்தினியைப் பார்த்தாள். அவள் ஏதோ மனக்

கவலையாக இருப்பதாக உணர்ந்துகொண்டாள். உடனே ஒன்றுங் கேட்கவில்லை. அவள் பத்தினியைப் பார்த்துக், ‘குழந்தாய்! என்னுடன் வா! உன்னுடைய மனக்கவலை தீர்ந்துவிடும். பேசவேண்டியவைகளைப் பிறகு பேசுவோம்’ என்றாள். பத்தினியைத் தன்னுடைய இருப்பிடத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றாள். உணவு முதலியன அளித்தாள். வேண்டிய உதவிகளைப் புரிந்தாள். ‘உன்னுடைய வரலாறு யாது? நீ இவ்வாறு தனியாக வருமாறு ஏற்பட்ட ஏது யாது?’ என்று உசாவினாள்.

பத்தினி தன்வரலாறு பகர்தல்

பத்தினி தன்னுடைய வரலாற்றைப் பகரத் தொடங்கினாள்: “நான் மதுரைமாநகரில் பிறந்தேன். என்னுடைய குலம் வேளாளர் குலம். நான் பிறந்ததும் என்னுடைய தாய் இறந்தாள். என் தந்தை என்னை அன்புடன் வளர்த்தார். தமிழறிவை உண்டாக்கினார். இறைவன்மாட்டு அன்புடைமையைப் பற்றச் செய்தார். நான் வளர்ந்து சிறந்து மங்கைப்பருவமடைந்து திகழ்ந்தேன். அப்பொழுது ஒரு வணிகர் மதுரைக்குவந்து என்னுடைய வீட்டிலே தங்கினார். அவருடைய ஊர் காவிரிப்பூம்பட்டினம். அவர் என்னுடைய தந்தைக்கு நண்பர். அவர் வணிகத்தின்பொருட்டு அடிக்கடி எங்கள் வீட்டிலேவந்து தங்குவது வழக்கம். அவருக்குத் திருமணம் முடிந்திருந்தது. ஆயினும் பிள்ளையில்லை; அதனால் என்னை இரண்டாவது மனைவியாக மணக்க விரும்பினார். என்னைத் திருமணஞ்செய்துதர வேண்டுமென்று என் தந்தையை வேண்டிக்கொண்டார். அவர் ஒரு குலம்; நான் ஒரு குலம் அவ்வாறிருந்தும் என்

தந்தையார் திருமணத்திற்கு இணங்கினார். 'தமிழர் அனைவரும் ஓரே குலம். குலவேறுபாடுகளெல்லாம் இடையே தோன்றிய போலிக்கூத்து' என்ற உயர்ந்த நோக்கங்கொண்டிருந்தார் அவர். திருமணஞ் சிறப்புடன் நடைபெற்றது. நான் காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்து இல்வாழ்க்கையைத் தொடங்கினேன். என்னை என் கணவர் அன்புடன்தான் நடத்திக்கொண்டிருந்தார். எக்காரணத்தை முன்னிட்டும் எங்கட்குக் கருத்து வேறுபாடு உண்டாகியதில்லை. நான் சூல் கொண்டேன். நான் சூல் கொண்டதைக் கண்டு மூத்தாள் பொறாமை கொண்டாள். அம்மூத்தாளுக்குச் சாத்தன் என்னும் பெயருடைய ஓர் அண்ணன் இருக்கிறான். அவன் வஞ்சனைகள் செய்வதிலும் கலாம் விளைப்பதிலும் வல்லவன். அவனைக் கொண்டு மூத்தாள் கலாம் விளைக்கச் செய்ததுடன், தானும் என் கணவன் மனதைப் பலவாறு கலைக்கத் தொடங்கினாள். இருவருமாகச் சேர்ந்து கொண்டு, 'பிற குலத்தினளை வீட்டிலே வைத்துக்கொள்ளக் கூடாது. அவ்வாறு வைத்துக்கொண்டால் நம்முடைய குலத்தார்கள் நம்மைக் குலத்தைவிட்டு விலக்கிவிடுவார்கள். நன்மை தீமைகளுக்கு வரமாட்டார்கள். நம்மையுஞ் சேர்க்கமாட்டார்கள். நம்முடைய செல்வம் பிற குலத்தாளுடைய பிள்ளைக்குச் சேரக்கூடாது,' என்று பலவாறு கூறிக் கலைத்துவிட்டார்கள். அவர்கள் கூறியவற்றிற்கு என் கணவரும் இணங்கி என்னை வீட்டை விட்டுப் புறப்படுமாறு வற்புறுத்தினார். நான் சூல் கொண்டிருக்கிறேன் என்பதை உணர்ந்துங்கூட அவர் மனம் இரங்கவில்லை. என்னைப் பாதுகாவாமல் வீட்டை விட்டு வெளியேற்றிவிட்டார். நான் பிரிந்து இருந்து கொண்டால் குடியிருக்க வீடும் செலவுக்குப் பொருளுங்

தருவதாகக் கூறினர். நான் அவைகளைப் பெற்றுக் கொள்ள விரும்பவில்லை. திக்கற்றவளாகப் புறப் பட்டேன். கால்சென்ற வழியே நடந்துவந்தேன்; நேற்று மாலையிற் காளிகோவிலை யடைந்தேன். என் னுயிரைப் போக்கிக்கொள்ளலாம் என்று முடிவு செய்தேன். கனவிற் காளிதேவி தோன்றியருளினள். 'நினக்குத் தக்க பாதுகாப்பு ஏற்படும். நாளைக் காலையில் இங்கு ஒரு தவமகள் வருவாள். அவள் உன்னை யழைத்துச் செல்வாள். உனக்கு ஆண்மகன் பிறப்பான். அவனற் கவலை நீங்கிவிடும்' என்று திருவாய்மலர்ந் தருளினள். அதன்படியே தாங்களும் வந்து என்னை அழைத்துவந்தீர்கள். என்னுடைய துன்பமும் நீங்கியது. தீவினையாட்டியாகிய என்னுடைய வரலாறு இதுதான்'' என்று கூறினள். பத்தினியின் வரலாற்றைக்கேட்ட ஔவை இரங்கினள். பிறகு தன்னுடைய கதையைக் கூறலானள்.

ஔவை தன் வரலாறு கூறுதல்

"இச் சிற்றூரினுடைய பெயர் காளிகுடி. இங்கு முன்னளில் ஏகப்பர் என்னும் பெயருடைய செல்வர் ஒருவர் இருந்தார். அவருக்கு நான் மகளாகத் தோன்றி னேன். நான் தகுந்த அகவையை அடைந்ததும் என் தந்தை, என்னை என் மாமனுக்கு என்னுடைய உடன் பாடில்லாமலே மணஞ்செய்து கொடுத்துவிட்டார். எங்களிருவருக்கும் பிடித்தம் பொருத்தமாகவில்லை. இருவரும் பூனையும் எலியும்போல் எப்பொழுதுஞ் சண்டையிட்டுக் கொண்டிருந்தோம். எனக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. என் கணவன் விலைமகள் ஒருத்தியினுடைய கூட்டுறவைக் கொண்டான். அதனற் செல்வம் அழிந்தது. உடலில் பல நோய்கள் உண்டாயின.

இறுதியில் உயிரையும் இழந்தான். நான் குழந்தையை அருமையாக வளர்த்தேன். அக்குழந்தை மணஞ்செய்யும் அகவையை அடைந்தது. அப்பெண்ணுக்குப் பொருத்தமான தலைவனைத் தேடித் திருமணஞ் செய்வித்தேன். அப்பெண்ணும் ஒரு குழந்தையைப் பெற்றாள். ஒருநாள் பாம்பு ஒன்று என் மகளைக் கடித்து விட்டது. அதனால் அவள் இறந்தாள். தாயற்ற சேயும் இறந்துவிட்டது. என் மகள் இவ்வாறு தீச் சாவை யெய்தியது எனக்குப் பெருந்துன்பத்தை யுண்டாக்கியது. நான் மிகுந்த மனக்கலக்கம் அடைந்தேன். மனக்கவலையின் மிகுதியினால் எனக்குப் பல நோய்கள் உண்டாயின. உடல் துரும்பாக இளைத்துப் போய் விட்டது. உலகப் போக்கில் எனக்கு இருந்த எண்ணம் அடியோடு மாறிவிட்டது. எனது செல்வத்தை வறியவர்கட்கு வழங்கிவிட்டேன். எனக்கு உலக நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை, வாழ்க்கை நிலையாமை முதலியவற்றின் இயல்பு தெளிவாகத் தெரிந்தது.

அறவுரை பெறுதல்

தகுந்த ஆசிரியரையடைந்து மெய்யறிவைப் பெற வேண்டுமென்று எண்ணினேன். பலவிடங்களினுஞ் சுற்றித் திரிந்தேன்.

ஒரு பெரியார் :

“உலகத்திலுள்ள செல்வப்பொருளைப் பொருளாக மதித்தல் கூடாது; அறத்தைத்தான் ஒரு பொருளாக மதித்துப் போற்றுதல்வேண்டும். அறத்தைப் போற்றுபவர்கள்தாம் வானுலக இன்பத்தை யடைவார்கள்” என்று அருளிச்செய்தார்.

ஒரு பெரியார்:

"பொய் சொல்லுதல் கூடாது; புறங்கூறுதல் கூடாது யாரையும் இகழ்தல் கூடாது; களவுசெய்தல் கூடாது; உயிர்களைக்கொலைபுரிதல்கூடாது; இவைகளைப் புரிந்தால் நிரயத் துன்பத்திலே வருந்தும்படியாக நேரிடும்" என்று அருளிச்செய்தார்.

ஒரு பெரியார்:

"நாம் எதனைக் காவாதொழியினும் நாவினைக் காப்பாற்றுதல்வேண்டும். நாவானது மிகக் கொடியது. அதனை அதன் போக்கிலே விட்டுவிட்டால், ஒருவரை எல்லாவகையான துன்பங்களுக்கும் உட்படுத்தும். இறுதியிலே நிரயத்தினும் தள்ளி வருத்தப்படுத்தும்" என்று உரைத்தருளினர்.

ஒரு பெரியார்:

"பிற உயிர்களைத் தன்னுயிர்போலப் பாதுகாத்தல் வேண்டும். பிற உயிர்களிடத்துச் சினங்கொள்ளுதலும் பகைகொள்ளுதலுங் கூடாது. பிறவுயிர்களைத் தம் முயிர்போல் போற்றுவோர் இறைவன் அடிமலரின்பத்தைப்பெறுவார்கள்" என்று புகன்றருளினர்.

ஒரு பெரியார்:

"ஐம்புலன்களையும் அடக்குதல்வேண்டும்; ஒருவருக்கு மிகுந்த பொருளும் இன்பவாழ்வும் நன்கு அமைந்திருக்குமாயினும், அவர்கள் அவைகளை யெல்லாந் துறந்துவிட்டுத் தவஞ்செய்தல் வேண்டும்; அருள் நிறைந்த தவந்தான் நமக்கு மறுமையிற் பேரின்பத்தை உண்டாக்கும்" என்று உரைத்தருளினர்.

ஒரு பெரியார் :

"இளமையானது நிலையற்றது; இன்பமும் நிலையற்றது; செல்வமும் நிலையற்றது; மக்கள் யாக்கையை எடுத்தவர்களுக்கு நாள்தோறுந் துன்பப் பெருக்குத் தான் மிகுந்துகொண்டிருக்கிறது. ஆகையால் ஒவ்வொருவரும் வீடுபேற்றிற்கான வழியைத்தான் தேடுதல் வேண்டும்" என்று கூறியருளினர்.

ஒரு பெரியார் :

"காமமானது மிகுந்த தீமையை உண்டாக்கும்; அக்காமத்தால் பற்றப்பட்டவர்களுடைய அறிவானது அழிந்துபோகும்; இந்தக் காமத்தினுல்தான் நமது பிறவி நாள்தோறும் மிகுந்து வளர்ந்துகொண்டு வருகின்றது. எத்தகைய பயனும் அற்ற காமத்தை அறவே விட்டொழித்தல் வேண்டும்" என்று இயம்பியருளினர்.

மற்றும் பல பெரியார்கள் சமய உண்மைகளைப் போதித்து எனக்கு மெய்யறிவை யுண்டாக்கினுர்கள். என்னுடைய உலகப்பற்று முற்றிலும் அற்றுவிட்டது" என்று கூறி, மேலும் பல நன்னெறிகளைப் பத்தினிக்கு உரைத்தார். அதனுற் பத்தினியின் உலகப்பற்றும் பறந்துவிட்டது.

பத்தினி மகப் பேறுதல்

பத்துத் திங்களும் நிறைந்தன பத்தினி ஓர் அழகிய ஆண் குழந்தையைப் பெற்ருள். அக்குழந்தைக்குத் தவமகள், 'உத்தமன்' என்று பெயரிட்டாள். உத்தமன் இனிது வளர்ந்துகொண்டிருந்தான். தவமகள் அச்சிறுவனைக் கருத்துடன்போற்றிப் பாதுகாத்தாள். உரிய காலத்திலே பள்ளியில் வைத்துக் கல்வி கற்பித்தாள்.

உயர்ந்த நிலைமையில் உத்தமனை வைக்கவேண்டு மென்பது மூதாட்டியின் எண்ணம். உத்தமனும் அதற்குரியவனாகவே விளங்கினான். இயற்கையில் உத்தமனுக்கு நுண்ணறிவு அமைந்திருந்தது. அஞ்சாமையும் ஆண்மையும் அவனிடத்தில் திகழ்ந்தன. பெரியோர்கட்குப் பணிதல் முதலிய நற்பண்புகளும் உத்தமனிடத்திற் சிறந்து விளங்கின.

சிறுவர்கள் ஆடல்

ஒருநாள் உத்தமன் ஊர்ச் சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தான். சிறுவர்கள் பலவகையாக விளையாடிக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவருந் தம்தம் தந்தையின் இயல்பு இவ்வாறெனா உரையாடினர். உத்தமனோ தன் தந்தையின் இயல்பையறியான். அதனால் தந்தையின் இயல்பைப்பற்றிப் பேசமுடியாதவனாக இருந்தான். அப்பொழுது ஒரு சிறுவன் மற்றைய சிறுவர்களைப் பார்த்தான். உத்தமனை அவர்கட்குச் சுட்டிக்காட்டினான். 'இவ்வுத்தமன் தன்னுடைய தந்தையை அறியான்' என்று இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றும்படியாக இயம்பினான். நுண்ணுணர்வு மிகுந்த உத்தமனுடைய முகஞ் சுருங்கிவிட்டது. அவன் அச்சிறுவர்களைவிட்டுப் பிரிந்து வீட்டிற்குச் சென்றான். தன் தாயைக் கண்டான். விளையாடிய இடத்தில் நிகழ்ந்த உரையாடலைக் கூறினான். 'அம்மா! என்னுடைய தந்தை எங்கிருக்கிறார்? நான் அவரைப் பார்த்ததில்லையே! நான் அவரைப் பார்க்கவேண்டும்' என்று கூறினான்.

பத்தினி வருந்துதல்

உத்தமன் உரைகளைப் பத்தினி கேட்டாள்; அவளுடைய உள்ளங் கலங்கியது. தன் மகனைப்

பார்த்து, "உன் தந்தை வைரவாணிகஞ் செய்பவர். பெருஞ்செல்வர்; அவர் இருக்கும் ஊர் காவிரிப்பூம் பட்டினம். நான் பிறந்த ஊர் மதுரை. என்னுடைய குலம் முதலியார். உன் தந்தையின் குலம் செட்டியார். உன் தந்தைக்கு முன் ஒரு முறை திருமணம் நடைபெற்றது. ஆயினும், அந்த மூத்த மனைவியால் அவருக்குப் பிள்ளையுண்டாகவில்லை. அதனால் அவர் குல வேறுபாட்டைக் கருதாமல் என்னை இரண்டாவது மணஞ்செய்துகொண்டார். மக்கட் பேற்றின் பொருட்டே அவர் என்னை மணஞ்செய்து கொண்டிருந்தும், மூத்தாள் சூழ்ச்சியால் வீட்டைவிட்டு விரட்டிவிட்டார். உன்னை நான் சூல்கொண்ட பிறகுதான் என்னை வீட்டைவிட்டுத் துரத்தினர். பொருமைதான் நான் வீட்டைவிட்டு வெளியே புறப்படக் காரணம். தனியே புறப்பட்டுவந்த நான் இறைவியருளால் இந்த அம்மையாரைக் கண்டேன். இங்குதான் நீயும் பிறந்தாய்" என்று கூறினள்.

உத்தமன் பதற்றம்

தாய் கூறியதைக் கேட்டதும் உத்தமனுடைய உள்ளம் பதறியது. அவன் தன்னுடைய தாயைப் பார்த்து, 'அம்மா! என்னுடைய தந்தை செய்தது பெரிய தவறாகும்; நான் இன்றைக்கே காவிரிப்பூம்பட்டினஞ் சென்று என்னுடைய தந்தையைப் பார்க்கிறேன்; நான் யார் என்பதைக் கூறுகிறேன்; நம்மிருவரையும் ஏற்றுக் கொள்ளுமாறு செய்கிறேன்; நான் புறப்பட்டுப் போவதற்கு நீ உடன்பாடு தருதல்வேண்டும்' என்றான்.

பத்தினி பதில்

உத்தமன் உரைகளைப் பத்தினி கேட்டாள். 'அப்பா மகனே! உன்னை அந்தரி கண்டால் வயிறு எரிவாள். தன்

அண்ணனைக்கொண்டு யாதேனும் தீங்குசெய்ய முயல்வாள். நீ அங்கு செல்வது உனக்குத் தீங்காக முடியும். நாம் அடங்கியிருப்பதே அறிவுடைமையாகும். நமக்கு நாமே அல்லலைத் தேடிக்கொண்டு தொல்லைப்படுதல் கூடாது. நமக்குப் பரிந்து பேசக்கூடியவர்கள் அங்கு யாரும் இல்லை' என்றாள்.

உண்மையைப் புலப்படுத்த உறுதி கொள்ளுதல்

பத்தினி கூறிய உரைகள் உத்தமனுக்கு மன நிறைவை உண்டாக்கவில்லை. தன் தந்தைசெய்தது, பெரிய ஒழுங்கீனமான முறைமையென்று அவன் உறுதியாக எண்ணினான். அவன் தன்னுடைய தாயைப் பார்த்து, 'நாம் நமக்குரிய தகுதியைப் பெருமல் அடங்கி யிருப்போமானால் அஃது ஏற்றதாகாது. நம்முடைய பகைவர்களால் என்றும் இகழப்படுவதற்கே இடமாகும். நம்மிடம் நேர்மை இருக்கும்பொழுது நாம் ஒழுங்கீனத்திற்குப் பணிந்துபோதல் கூடாது. ஆகையால், நான் புறப்பட்டுப் போவதற்கு உடன்பட வேண்டுமென்று பிடிவாதமாக வேண்டிக்கொண்டான்.

உத்தமனை அனுப்புதல்

பத்தினி தன்னைப் பாதுகாத்துப் போற்றும் ஔவையைக் கலந்து எண்ணினாள். அம்மூதாட்டி சிறுவனை அனுப்பிப்பார்ப்போமென்று முடிவு செய்தாள். உத்தமனுக்குத் துணைசேர்த்து அனுப்பினாள். ஆகவேண்டிய செய்திகளை உரைத்தாள். 'நீ வெற்றி பெற்று மீள்க' என்று வாழ்த்துரை கூறினாள்.

பொய்ம்மகன் புலைக்கூத்து

இனிமேற் காவிரிப்பூம்பட்டினத்தில் நிகழ்ந்ததைப் பார்ப்போம். விலைமகளுக்குப் பிறந்து, அந்தரிக்குப்

பிள்ளையாக மாறி ஆட்டம் போட்டுக்கொண்டிருந்த அழகன், வளையாபதிக்குப் பல தீமைகளை உண்டாக்கினான். அந்தப் புலைமகன் விலைமகள் மகனானகையால் வைரவாணிகனிடம் நிலைபெறவில்லை. வளையாபதி பொருள் தேடுவதற்கு எண்ணினான். புணையேறிப் பொங்குகடல்மீது போயிருந்தான். அழகனும் இங்கு பொருள்தேடுந் துறையில் இறங்கினான். அவனுடைய உண்மைத்தாயும் சாத்தனுடைய காதலியுமாகிய விலைமகள், வளையாபதியின் வீட்டைக் கொள்ளையடிக்குமாறு தன்னுடைய மகனைத் தூண்டினாள். சாத்தனும் விலைமகள் மையலில் தாழ்ந்திருந்தானாகையால் கொள்ளைக்கு இடங்கொடுத்துக்கொண்டிருந்தான்.

விலைமகளுக்கு மிகுதியான பொருள் சேர்ந்துவிட்டது. எங்கேனும் ஓடிப்போகலாமென்று முடிவு செய்தாள். தன் மகனையும் அழைத்துக்கொண்டு இரவிலே மறைந்துவிட்டாள். விலைமகளிரிடத்திலே உண்மையும் ஒழுக்கமும் ஏது?

விலைமகளிர்

விலைமகளிர் விலங்கையும், நாயையும், தீயையும், பேயையும், நோயையும் போன்றவர்கள்.

வீபொரு ளானை அகன்று பின்னும்ஓர்
மாபொரு ளான்பக்கம் மாண நயத்தலின்
மேய்புலம் புல்லற மற்றோர் புலம்புகும்
மாவும் புரைப மலரன உண்கணார்.

(வீபொருளான்-பொருள் இழந்தவன். மாபொருளான்-மிகுந்த செல்வத்தை யுடையவன். மாண - சிறப்பாக. நயத்தலின் - விரும்புதலின். மாவும் - விலங்குகளையும். புரைப - ஒப்பாவார்கள். உண்கணார் - மையுண்ட கண்களையுடையவர்கள்.)

நாயும் போல்வார் பலர்எச்சிலும் நச்சலால்
தீயும் போல்வார் செய்ந்நன்றி சிதைத்தலால்
நோயும் போல்வார் நுகர்தற் கருமையால்
வேயும் போல்வார்இவ் வேல்நெடுங் கண்ணினர்.

(நச்சலால் - விரும்புதலால். வேய் - மூங்கில்.)

உண்மை வெளிப்படுதல்

விலைமகள் தன் மகனை அழைத்துக்கொண்டு ஓடிப் போனபின் சிலநாட்களில் வளையாபதி திரும்பிவந்து சேர்ந்தான். வீட்டிலிருந்த செல்வம் கொள்ளையடிக்கப் பட்டிருத்தலைக் கண்டான். தலையில் அடித்துக்கொண் டான். அந்தரியுஞ் சாத்தனும் விலைமகள் மகனைப் பிள்ளையெடுத்த செய்தி, அதுவரையில் வெளிப்படை யாகத் தெரியாமல் இருந்தது. ஊர்மக்களும் வளையா பதியும் அழகனைப்பற்றி ஐயப்பட்டுக்கொண்டிருந்தார் களேதவிர, ஐயமற உண்மையை யாருந் தெரிந்திலர். இப்பொழுதோ ஐயமறத் தெரிந்துவிட்டது. மக்கள் ஆங்காங்கு கூடிப்பேசினர். சிலர், 'இதுவரை நாராயண செட்டிக்கு மகனாக இருந்த அழகன் விலைமகள் மகனும். இளையாளை விரட்டுவதற்காகவே மூத்தாள் தன் மகன் போல் எடுத்துவளர்த்தாளாம். அவன் இப்பொழுது செட்டியாருடைய பொருளை வாரிக்கொண்டு தாயோடு ஓடிப்போய்விட்டானும்' என்று பேசினார்கள். சிலர் வைரவாணிகனிடமும் வந்து துன்பம் உசாவினார்கள். 'உம்முடைய மகன் ஓடிப்போய்விட்டானுமே' என்று கேட்டார்கள். வளையாபதிக்குப் பெரிய வெட்கக் கேடாகவிருந்தது. அவன் வெளியே தலைநீட்ட முடிய வில்லை. மிகுந்த இழிவுக்குள்ளான அவன், தன் மைத் துனனாகிய சாத்தனைப் பலவாறு வருத்தினான். வளையா பதியால் வருத்தப்பட்ட சாத்தன் விலைமகளையும் அவள்

மகனையுந்தேடிக்கொண்டு சென்றான். ஓரிடத்திலே அந்தக் கொள்ளைக்காரி சாத்தனிடஞ் சிக்கினாள். முன் சினங்கொண்ட சாத்தன் அவளைக் கொன்றுவிட்டான். விலைமகளைச் சாத்தன் கொன்றதைக்கண்ட சிலர், சாத்தனைப்பிடித்துக் கொன்றுவிட்டார்கள். அழகன் போன விடந்தெரியாமல் மாயமாக மறைந்துவிட்டான். வளையாபதி தன் இளைய மனைவிக்குத் தான் இழைத்த தீமையை எண்ணி வருந்திக்கொண்டிருந்தான்.

உத்தமன் தந்தையைக் காண்டல்

மேற்கூறிய நிகழ்ச்சிகள் ஏற்பட்ட சமயத்தில், உத்தமன் காவிரிப்பூம்பட்டினத்தையடைந்தான். சிலரால் தன் தந்தையை அறிந்தான். சென்று கண்டான். உத்தமனைக் கண்டதும் வளையாபதிக்குப்பிள்ளைப்பாசம் உண்டாகியது. ஆயினும் அவன் அதனைவெளிக்குக் காட்டவில்லை. 'ஓ சிறுவனே! நீ யாவன்? இங்கு வர வேண்டிய காரணம் யாது? உன்னுடைய பெற்றோர் யாவர்?' என்று கேட்டான்.

உத்தமன் பதில்

வளையாபதியின் மொழிகளைக்கேட்ட உத்தமன் பேசத்தொடங்கினான். 'என் அருமைத்தந்தையாரே! வணங்குகிறேன். நீர் மதுரைமாநகரிலே பத்தினியென்னும் மாதை மணந்துவந்து இல்வாழ்க்கை நடத்தவில்லையா? சூல்கொண்டிருந்த அந்த மனைவியை நீர் வீட்டைவிட்டுத் துரத்தவில்லையா? அந்த மாதினுடைய சூலில் இருந்த பிள்ளை நான்தான். சூல்கொண்டிருந்த மனைவியைத் தனியே வீட்டைவிட்டுத் துரத்தியதுதான் நீர் படித்த ஒழுங்குமுறையோ? அம்மாதரசியை நீர் கைவிட்டாலுந் தெய்வம்கைவிடவில்லை. காளிகுடி

என்னும் ஊரிற்சென்று இரக்கம் மிகுந்த ஓர் அம்மையாரின் ஆதரவில் தங்கினாள். என்னைப் பெற்றாள். நீர் என்னையும் என் தாயையும் ஏற்றுக்கொள்வதுதான் ஒழுங்குமுறைமையாகும். நான் கூறியவற்றை நீர் ஒப்புக்கொள்ளாமற்போவீராயின் நான் வீணே போய் விடமாட்டேன். ஊரார்களையெல்லாங் கூட்டி நேர்மையை நிலைநாட்டாமல் விடமாட்டேன்' என்றான்.

தந்தையின் பதில்

உத்தமன் கூறிய உரைகளை வணிகன் கேட்டான். 'நீ என்மகன் என்பதற்கு என்ன சான்றுள்ளது? எவள் பெற்ற மகனோ நீ; உன்னை எனக்குத் தெரியாது. ஆகையால் நீ இவ்விடம்விட்டு உடனே செல்வாயாக!' என்றான். சிறிதுபோது இருவருக்குஞ் சொற்போர் நடந்தது. தன் மகனை ஏற்றுக்கொள்வதற்கு அவனுக்கு விருப்பந்தான். பொய்ப்பிள்ளையால் மிகுந்த தொல்லையை அடைந்தவனல்லவா? வளையாபதியாகையால் அவனுடைய உள்ளம் எளிதில் வளைந்துகொடுக்கவில்லை. மேலும் ஊரார்கள் யாது சொல்வார்களோ என்று அஞ்சினான். 'நீ தக்க சான்றுகளுடன்வந்து ஊரார் முன்பு என்மகன்தான் என்று நிலைநாட்டுவாயானால் உன்னை நான் ஏற்றுக்கொள்கிறேன்' என்றான்.

மூத்தாள் உத்தமனுக்குப் பரிந்துபேசுதல்

பிள்ளைபெற்றதாகப் பொய்யாக நடித்துப் பெருந்தொல்லைகளையடைந்தவள் மூத்தவள். இளையாளுக்குத் தான் இழைத்த தீமையை எண்ணி வருந்தினாள். அதற்குப்பதிலாக உத்தமனை மகனாக ஏற்றுக்கொள்ளலாமென்று எண்ணினாள். இளையாளையும் ஏற்றுக்கொள்ள விரும்பினாள். உத்தமனையும் அவனுடைய தாயையும்

ஏற்றுக்கொள்வோமென்று பரிந்து பேசினாள். வளையாபதி எதற்கும் வளையாபதி அல்லனோ? இப்போது மூத்தாளுடைய வேண்டுகோளையும் மறுத்துவிட்டான். 'அந்தச் சிறுவன் பெரிய வாயாடியாக இருக்கிறான். நம்மைச் சிறிதும் மதிக்காமற் பேசுகிறான். அவன் நம்முடைய பிள்ளையென்று ஊரார்கள் முன்பு நிலைநாட்டினால் கொள்வோம்' என்றான்.

உத்தமன் திரும்பிவந்து தாயைக் காண்டல்

உத்தமன் காளிகுடிக்குத் திரும்பிச் சென்றான். தன் தாயைக் கண்டான். தன் தந்தை கூறியவைகளைக் கூறினான். பத்தினி காளிதேவியை வேண்டினாள். ஔவையையும் உடனழைத்துக்கொண்டு புறப்பட்டாள். மூவரும் காவிரிப்பூம்பட்டினத்தை யடைந்தனர். ஆங்குள்ள அறங்கூறவைக்குச் சென்றனர்.

அறங்கூறும் மன்றம்

காவிரிப்பூம்பட்டினத்துப் பெரியோர்களும், வழக்கறிஞர்களும் அறங்கூறவையிற் கூடியிருந்தார்கள். பத்தினி அவையோர் முன்பு வைரவாணிகன் தன்னை மதுரையில் மணம்புரிந்துவந்தமையையும், தான் சூல் கொண்டிருந்தபோது, மூத்தாள்கொண்ட பொறாமை காரணமாகத் தன்னை வீட்டைவிட்டு வெளியேற்றியதையும் கூறினாள். தனக்கு நேர்மை வழங்குமாறு வேண்டிக்கொண்டாள். அறங்கூறவையோர் அந்தரி வளையாபதி முதலியவர்களை அழைத்து உசாவினார்கள்.

ஔவை சான்று கூறுதல்

காளிகுடியில் பத்தினியைப் பாதுகாக்குந் தவமகளாகிய ஔவை எழுந்து, தான் காளி கோயிலிற்

பத்தினியைக் கண்டதுமுதல் அன்றுவரை நிகழ்ந்த செய்திகளையெல்லாம் விளக்கமாக வுரைத்தாள்.

உத்தமன் வளையாபதியின் மகனே

அறங்கூறும் மன்றத்தார்கள் நன்கு ஆராய்ந்தார்கள். 'பத்தினியின் குலம் வேருகவும் வளையாபதியின் குலம்வேருகவும் இருப்பினும் அதனுல் தவறில்லை. வளையாபதி மகப்பேற்றை விரும்பியே இரண்டாவது திருமணஞ் செய்திருக்கிருன். அவ்வாருகவும் பத்தினியை இடையே வீட்டைவிட்டு வெளியேற்றி வருத்தப்படுத்தியது பொறுக்கமுடியாத குற்றமாகும். உத்தமன் வளையாபதியின் மகனே என்பதற்குச் சிறிதும் ஐயமில்லை. வளையாபதியின் செல்வத்திற்கு உத்தமனே உரிமையுடையவன் ஆவன்' என்று முடிவுரை கூறினார்கள்.

வளையாபதி வளைந்து கொடுத்தல்

வைரவாணிகன் இத்தகைய முடிவையே எதிர்பார்த்து விரும்பிநின்ருன். ஆகையால், அவனுக்கு இம்முடிவு மகிழ்ச்சியை அளித்தது. அவன் தன்னுடைய மனவைராத்தை விட்டான். அவையோர் முடிவுக்கு வளைந்துகொடுத்தான். 'பெரியோர்களே! நீங்கள் கூறிய முடிவை நான் முழு விருப்பத்துடன் ஏற்றுக்கொள்ளுகிறேன். நான் என்னுடைய இளையமனைவியை வீட்டைவிட்டுத் துரத்தியது அறிவின்மையேயாகும். அதன் பொருட்டு மிகவும் இரங்குகிறேன். நான் இருவரையும் அன்புடன் ஏற்றுப் போற்றுகிறேன். எனது செல்வத்தையெல்லாம் உத்தமனுக்கே அளிக்கிறேன்' என்ருன்.

பத்தினி முடிவுரை

பத்தினியெழுந்து அவையோரை வணங்கினுள். 'பெரியீர்! நீங்கள் எனக்கும் என் மகனுக்குந் தகுந்த முறையில் நேர்மை வழங்கினீர்கள். நான் இனிமேற் பொய்யான இவ்வுலகவாழ்வை விரும்பவில்லை. உலக நிலையாமை, செல்வ நிலையாமை முதலியவைகளை நான் நன்குணர்ந்துகொண்டேன். தவமூதாட்டியார் என்னுள்ளத்தைத் தவநெறியிலே பண்படுத்திவிட்டார். நான் இனிமேல் துறவுவழியிலே நிற்றற்குரியவள். நான் இவ்வுலகவாழ்விலே உழன்று மேலும்மேலும் பிறப்பையடையமாட்டேன்.' என்று கூறி ஔவையுடனே புறப்பட்டாள். வளையாபதி பத்தினி தன்னுடன் வந்து மேலும் இல்வாழ்க்கையை நடத்துதல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அதற்குப் பத்தினி இணங்கவில்லை. ஔவையுடனேயே சென்றுவிட்டாள். உத்தமன் தந்தையுடன் இனிது வாழ்ந்திருந்தான்.

---

## வளையாபதிப் பாடல்கள்

### அறத்தின் சிறப்பு

பொருளைப் பொருளாப் பொதிந்தோம்பல் செல்லா(து)
அருளைப் பொருளா அறஞ்செய்தல் வேண்டும்
அருளைப் பொருளா அறஞ்செய்து வான்கண்
இருளில் இயல்பெய்தாத(து) என்னோ நமர்காள். (க)

### கற்புடைமை

நாடும் ஊரும் நனிபுகழ்ந் தேத்தலும்
பீடு றும்மழை பெய்கெனப் பெய்தலும்
கூட லாற்றவர் நல்லது கூறுங்கால்
பாடு பான்மிகு பத்தினிக் காவதே. (உ)

### பிள்ளையில்லாத செல்வம்

பொறையிலா அறிவு போகப் புணர்விலா இளமை மேவத்
துறையிலா வனச வாவி துகில்இலாக் கோலத் தூய்மை
நறையிலா மாலை கல்வி நலமிலாப் புலமை நன்னர்ச்
சிறையிலா நகரம் போலும் சேயிலாச் செல்வம் அன்றே. (ங)

### அறநெறி

பொய்யன் மின்புறங் கூறன்மின் யாரையும்
வையன் மின்வடி வல்லன சொல்லிநீர்
உய்யன் மின்னுயிர் கொன்றுண்டு வாழும்நாள்
செய்யன் மின்சிறி யாரொடு தீயன. (ச)

கள்ளன் மின்கள வாயின யாவையும்
கொள்ளன் மின்கொலை கூடி வரும்அறம்
எள்ளன் மின்இலர் என்றெண்ணி யாரையும்
நள்ளன் மின்பிறர் பெண்ணொடு நண்ணன்மின். (ரு)

### நாவடக்கம்

ஆக்கப் படுக்கும் அருந்தளைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத்(து) உய்ப்பிக்கும்
காக்கப் படுவன இந்திரியம் ஐந்தினும்
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே. (சு)

### பிறர்மனை நயவாமை

பெண்ணின் ஆகிய பேரஞர் பூமியுள்
எண்ண மிக்கவர் எண்ணினும் எண்ணிலார்
பின்னி நின்ற பெருவினை மேல்வரும்
என்ன தாயினும் ஏதில்பெண் நீக்குமின். (எ)

அருள்

உயிர்கள் ஓம்புமின் ஊன்விழைந்(து) உண்ணன்மின்
செயிர்கள் நீங்குமின் செற்றம் இகந்தொரீஇக்
கதிகள் நல்லுருக் கண்டனர் கைதொழும்
மதிகள் போல மறுவிலர் தோன்றுவீர். (அ)

கொல்லாமை

உலகுடன் விளங்கவரு சீர்த்திநிலை கொள்ளின்
நிலையில்கதி நான்கினிடை நின்றுதடு மாறும்
அலகில்துயர் அஞ்சின்உயிர் அஞ்சவரும் வஞ்சக்
கொலையொழிமின் என்றுநனி கூறினர் அறிந்தார். (கூ)

புலால் மறுத்தல்

பிறவிக் கடலகத் தாராய்ந்(து) உணரில்
தெறுவதிற் குற்றம் இலார்களும் இல்லை
அறவகை ஓரா *விடக்கு மிசைவோர்
குறைவின்றித் தன்சுற்றந் தின்றனர் ஆவர். (கய)

நிலையாமை

இளமையும் நிலையாவால் இன்பமும் நின்ற வல்ல
வளமையும் அஃதேயால் வைகலுந் துன்ப வெள்ளம்
உளவென நினையாதே செல்கதிக் கென்றும் என்றும்
விளைநிலம் உழுவார்போல் வித்துநீர் செய்து கொண்மின்.
(கக)

வறுமை

தொழுமகன் ஆயினும் †துற்றுடை யானைப்
பழுமரம் சூழ்ந்த பறவையிற் சூழ்ப
விழுமியரேனும் ‡வெறுக்கை உலந்தால்
பழுமரம் வீழ்ந்த பறவையிற் போப. (கஉ)

## வளையாபதிக் கதையால் அறியப்பெறும் அறநெறிகள்

1. எளியவர்களைத் தெய்வங் காக்கும்.
2. நன்மனம் உடையவர்கட்குத் தீமை உண்டாகாது.
3. தீமனம் உடையவர்கள் தீமையையே அடைவர்.
4. அறம் என்றும் வெல்லும்.
5. விலைமகளிர் கூட்டுறவு துன்பத்தை உண்டுசெய்யும்.
6. உலகவாழ்க்கை நிலையற்றது.
7. பொய் அதிக நாட்களுக்கு நிலைபெறமாட்டாது.

---

* புலால் தின்பவர் † துற்று-செல்வம். ‡ வெறுக்கை-செல்வம்.

காப்பியக் கதைகள்

(ஏழாம் புத்தகம்)

# உ. குண்டலகேசி





பத்திரை காளனைக் கண்டு காதல்கொள்ளுதல்

[பக்கம் 34]

# குண்டலகேசி



ஒரு வணிகன்

இராசகிருகம் என்பது ஓர் அழகிய நகரம். பல வகை நலங்களாலும் அந்நகரம் சிறந்து விளங்கியது. அந்நகரத்தின் மதில் வானை அளாவிநின்றது. நகரத்திற்கு வெளியே பெருங்காடு ஒன்று அமைந்திருந்தது. நகரம் பலவகைக் கைத்தொழில்களாலும் வாணிகத்தாலும் புகழ் பெற்றுத் திகழ்ந்தது. அந்நகரில் ஒரு வணிகன் இருந்தான். அவன் பெருஞ்செல்வம் படைத்தவன். அரசனுற் சிறந்தவர்கட்கு அளிக்கப்பெறும் 'ஏறுதி' என்னுஞ் சிறப்புப்பெயரும் அவ்வணிகனுக்கு அளிக்கப்பெற்றிருந்தது. அவன் அரசனுடைய அமைச்சர்களில் ஒருவன் என்றும் சிலர் கூறுப.

பத்திரை

அவ்வணிகன் இல்லறவாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருந்தான். அவனுக்கு ஒரு மகள் பிறந்தாள். அவளுக்குச் செய்யவேண்டிய சிறப்புக்களையெல்லாஞ் செய்தான். பத்திரை என்றுபெயர் இட்டான். நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்தான். அவள் கல்விகற்கத் தகுந்த காலத்தையடைந்தாள். தகுந்த ஆசிரியனை ஏற்படுத்திக் கல்வி கற்பிக்கச் செய்தான். பத்திரையும் நன்கு கல்வி பயின்றாள். அறிவிற் சிறந்து திகழ்ந்தாள். அவளுக்கு அகவையும் ஐம்மூன்று நிரம்பியது.

கள்ளன்மேல் காதல்

மாலைநேரங்களில் பத்திரை தன் வீட்டு மேன் மாடியில் தன் தோழிகளோடு விளையாடுதல் வழக்கம். ஒருநாள் மாலையில் பத்திரை அவ்வாறு விளையாடிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அரசனுடைய காவலர்கள் ஒரு கள்ளனைத் தெருவில் அழைத்துக்கொண்டு சென்றார்கள். முன் வினைப்பயனால் பத்திரை அக்கள்ளனைக் கண்டாள். அக்கள்ளனுடைய பேரழகு பத்திரையின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு விட்டது. அக்கள்ளனுடைய உள்ளமுகை உணராத பத்திரை அவன்மீது பெருங்காதல் கொண்டுவிட்டாள். அக்காதல் யாராலும் மாற்றமுடியாத உறுதியமைந்த பெருங்காதலாக மாறிவிட்டது. பத்திரையின் காதலைத் தோழிகள் உணர்ந்தனர். கள்ளன் மீது காதல் கொள்ளுவது கூடாதென்றும், அவ்வாறு கொள்வது எல்லோராலும் இகழப்பெறுதற்கு ஏதுவாகும் என்றும் வற்புறுத்திக் கூறினார்கள். காதலால் அறிவுக் கண்ணை இழந்த பத்திரைக்குத் தோழியர் கூறிய அறிவுரைகள் சிறிதும் பலனளிக்கவில்லை. தன் காதல் நிறைவேறா தொழியின் தான் இறந்துபடுவது திண்ணம் என்றுரைத்தாள். பத்திரையின் தாய்தந்தையர்கள் பத்திரையின் பொருந்தாக் காதலைக்கேட்டு வருந்தினார்கள். அவர்களும் பலவாறு அறிவுரை கூறிப்பார்த்தார்கள். எல்லாம் பயனற்றதாக முடிந்தது.

காளன் என்னும் கள்ளன்

அரசனுடைய காவலாட்களால் தெருவிற் பிடித்துச் செல்லப்பெற்ற கள்ளனுடைய பெயர் காளன். அவன் அரசனுடைய வேள்விசெய்வோனின் மகன். அமைச்

சனுடைய மகன் என்றுஞ் சிலர் கூறுவார்கள். அவன் இளமைக்காலத்தில் யாருக்குங் கட்டுப்படாதவனுய்க் கட்டவிழ்ந்த காளையாகத்திரிந்தான். ஒழுங்காகக் கல்வி கற்கவில்லை. ஆசிரியர், தாய்தந்தையர்கள் ஆகியோர் களைப் பகைவர்களாக எண்ணினுன். அவர்களுடைய நல்லறிவுரைகளையெல்லாம் இகழ்ந்தான். எப்பொழுதுந் தீயவர்களுடனுஞ் சூதாடிகளுடனுங் குடியர்க ளுடனுமே சேர்ந்து திரிந்தான். அப்பொல்லாதவர் களையே நல்லவர்களாக எண்ணினுன். அவர்களுடன் பொழுதைப்போக்கினுன். அவர்கள் மேற்கொண்டிருந்த தீய செயல்களையெல்லாந் தானும் மேற்கொண்டான். காளன் உயர்குடியிற் பிறந்தவனுகஇருந்தும், தாழ்ந்த வர்களுடன் சேர்ந்ததால் தானுந் தாழ்ந்தவனுக மாறி விட்டான்.

நிலத்தின் சேர்க்கையால் தண்ணீர் தன்னுடைய இயற்கைப்பண்பு மாறித் தான் சேர்ந்த நிலத்தின் குணத்தையடையும். அதுபோல மக்களுடைய அறிவு அவர்கள் சேர்ந்த கூட்டத்தார்களுடைய அறிவைப் போலாகும். இது பெரியோர்களுடைய கொள்கை. நாம் கண்டறிந்த உண்மையுங்கூட. காளன் தீயோர்க ளுடன் சேர்ந்து கெட்டுப்போனதைக்கண்டு பலரும் வருந்தினர். நாளடைவில் காளன் மிகவுங் கெட்டுப் போனுன். கள்ளர்களுடன் சேர்ந்து தானும் பெருங் கள்ளனுக மாறிவிட்டான்.

கள்ளனுக இருக்கக் காளனுக்குப் பிடிக்கவில்லை. புத்தசமயத்திற்புகுந்து தூய்மையாளனுக மாறிவிடுவ தென்று முடிவுசெய்தான். புத்தசமயப் பெரியார்களை யடுத்தான். அறிவுரைகள் பல கேட்டான். புத்தக் கோலம்பூண்டு நடித்தான். தீயவழியிற்சென்று பழகிய

அவனுடைய உள்ளம் சிறிதுந் திருந்தவில்லை. 'பழைய குருடி கதவைத்திறடி' என்றாற்போல, மீண்டும் கள்ளர்களுடன் சேர்ந்து கெட்டலைந்தான்.

ஒருநாள் இரவு பலர் சேர்ந்து கொள்ளையடித்ததுடன் கொலையுஞ் செய்தனர். அரசனுடைய காவலாட்கள் கள்ளர்களைத் தேடிப்பிடித்தனர். காளனும் காவலாட்களின் கையிற் சிக்கினான். அறநெறி மன்றத்தில் கள்ளர்கள் அனைவரையும் உசாவினர். காளன்மீது கொள்ளைக்குற்றமுங் கொலைக்குற்றமும் இருப்பதாக உறுதி செய்யப்பட்டது. ஒரு குறிப்பிட்டநாளிற் காளனைக் கொலைபுரியுமாறு அவனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. காளனைச் சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்றுகொண்டிருந்தனர். அந்தச் சமயத்தில்தான் பத்திரை காளனைக்கண்டு அவன்மீது காதல்கொண்டாள். காளன் உயர்குடியிற் பிறந்தவனாகையால் காமன்போல் கட்டழகு பொருந்தியவன். நல்ல உடற்கட்டு அமைந்தவன். இவைகளுடன் இளமை நலமும் இனிது அமையப்பெற்றவன்.

வணிகன் மன்னனிடஞ்சென்று வேண்டுதல்

தன் மகள் கள்ளன்மேற் கடுங்காதல் கொண்டுள்ளதையும், அக்காதலால் உடல் மெலிவதையும் வணிகன் உணர்ந்தான். கள்ளக்காளனை மணம்முடிக்காவிட்டால் அவள் இறந்துபடுவாள் என்று ஐயமற அறிந்தான். வேறு வழியில்லாதபடியால் அரசனிடஞ் சென்றான். தன் மகள் காளன்மேல் நீளமான காதல் கொண்டிருத்தலை உரைத்தான். 'அக்காளனைத் தன் மகட்குக் கடிமணஞ்செய்து வைக்காதொழியின், தான் தன் மகளை இழக்கவேண்டியதாக இருக்கும்' என்று

கூறினன். பத்திரையின் காதல் அரசனுக்கு வியப்பையளித்தது. அரசன் வணிகனிடத்திலே மிகுந்த நன்மதிப்புக்கொண்டிருந்தான். ஆகையால், அவன் காளனுடைய இறப்புத் தண்டனையை நீக்கி அவனை விடுதலை செய்தான். (வணிகன் காவலாட்களுக்கு கைக் கூலிகொடுத்துக் காளனை மீட்டுத் திருமணம் நடத்திய தாகவுஞ் சிலர் கூறுப.)

காளனுக்கும் பத்திரைக்குங் கடிமணம்

காளன் காலன்வாயில் நின்றுந் தப்பியதைக் கண்டு பத்திரை மகிழ்ந்தாள். காளன் விடுதலைபெற்றுத் தன் மணாளனாக வேண்டும் என்று பத்திரை புத்தர் பெருமானைப் போற்றி வழிபாடு செய்தாளாதலின், அவ்வழிபாடு பலனளித்ததென்று எண்ணினாள். வணிகன் தன் பெருஞ்செல்வ நிலைமைக்கேற்பப் பெருஞ் சிறப்புடன் திருமணத்தை நடத்தினன். பிணமகனாக வேண்டிய காளன், மணமகனான புதுமையைக் கண்டு, நகரத்துமக்கள் இதுவும் ஊழின் திருவிளையாடலே என்று வியந்தார்கள். தலைபோகுந் தண்டனையிலிருந்த காளன், பெருஞ்செல்வக் குடியில் தோன்றிய வணிக மாதுக்கு மணாளன் ஆனான் என்றால், யாருக்குத்தான் வியப்பாக இருக்காது? காளனே தனக்கு ஏற்பட்ட பெரும்பேற்றைக்கண்டு, அளவுகடந்த உவகையில் மூழ்கி மகிழ்ச்சியடைந்தான்.

இல்வாழ்க்கை

பத்திரையின் தந்தை தன் மகளுக்குத் தனி இல்லம் அமைத்துக்கொடுத்தான். இன்ப வாழ்க்கையை இனிது நடத்துவதற்கு வேண்டும் பொருள்களெல்லாம் அவ் வில்லத்தின்கண் இனிது நிறைக்கப்பெற்றன. இரு

வரும் தனித்திருந்து இன்ப வாழ்வை நுகர்ந்து கொண்டிருந்தார்கள். நாட்கள் பல சென்றன.

ஊடலும் உட்பகையும்

ஊடல் என்பது கணவனுக்கும் மனைவிக்கும் இடையே நிகழும் விளையாட்டுச் சொற்போர். ஒருநாள் காளனுக்கும் பத்திரைக்கும் இடையே இந்த ஊடல் உண்டாயிற்று. இருவருடைய இன்பவாழ்வின் இறுதியும் நெருங்கிவிட்டது. ஊழ் உள்ள வரையில்தானே எச்செயலும் நடைபெறும்? காளனும் பத்திரையும் ஒருவரை ஒருவர் பலவாறு இகழ்ந்துகொண்டனர். பத்திரை காளனைப் பார்த்து, 'நீர் முன்பு கள்ளனாகத் திரியவில்லையா? சிறையில் இருக்கவில்லையா? இறப்புத் தண்டனை கொடுக்கப்பட்டுக், கொலைசெய்யப் பெறுதற்கு இருந்த உம்மை, நான்தானே மீட்டுக் காப்பாற்றி இந்த இன்ப வாழ்வில் அமர்த்தினேன். நான் இல்லாவிட்டால் நீர் இதுவரையில் மாண்டு மடிந்து மண்ணோடு மண்ணாகப் போயிருப்பீர் அன்றோ?' என்று கூறினாள்.

பத்திரையின் மொழிகள் காளனுக்கு மிகுந்த மனவருத்தத்தை உண்டாக்கின. ஒருவருடைய குற்றத்தை எடுத்துக்காட்டி இடித்துரைத்தால் அஃது அவர்களுடைய மனதைப் புண்படுத்திவிடும். அவர்களுக்கு நாம் எவ்வளவு நன்மை செய்திருந்தாலும் அவர்கள் அதை ஒரு பொருட்படுத்தமாட்டார்கள். ஆயிரம் நன்மைகளைச் செய்து, இறுதியில் ஒரு தீமையைச் செய்துவிட்டால் எல்லாம் தீமையாகவே முடிந்துவிடும். இஃது உலக வழக்கம். ஒரு குடம் பாலில் சிறிது நஞ்சுகலந்தாலும் எல்லாம் நஞ்சாகி விடுவது இயற்கையல்லவா? காளன் பத்திரையால் எல்லா நன்

மைகளையும் அடைந்திருந்தாலும் அவைகளையெல்லாம் அடியோடுமறந்து விட்டான். பத்திரை தன்னை இகழ்ந்துரைத்ததுதான் அவனுக்குப் பெரிதாகத் தோன்றியது. பத்திரையைக் கொலைசெய்துவிடுவதென்று, உள்ளத்தில் ஓர் உறுதியான எண்ணத்தைக் கொண்டான்.

### உட்பகை வளர்தல்

நம்முடைய திருவள்ளுவப் பெரியார் தம்முடைய திருக்குறளிலே, எள்ளைப் பிளந்த அளவு உட்பகையேயாயினும் ஒருவன் உள்ளத்தில் தோன்றி விடுமாயின், அதனால் மிகுந்த தீமையுண்டாகுமென்று கூறியுள்ளார். அவ்வுண்மை காளனின் செய்கையில் மெய்யாகிவிட்டது. ஆயினும், காளன் அப்பொழுது வெளியே ஒன்றையுங் காட்டிக்கொள்ளவில்லை. இவள் நம்முடைய மனைவியாக இருந்தும் நம்மை இகழ்ந்தாளே என்னும் எண்ணம் நாள்தோறும் வளர்ந்து கொண்டிருந்தது. பத்திரையைத் தொலைப்பதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். நாட்கள் பல சென்றன.

### மலைக்கு அழைத்துக்கொண்டு செல்லுதல்

உட்பகை தோன்றிய பிறகு வெளி நட்பு எவ்வளவு நாளைக்கு நீடிக்கும்? சிலநாள் பழமை போலவே வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தனர். பத்திரை ஊடல் நிகழ்ச்சியை அறவே மறந்து விட்டாள். தன் கணவன் தன்மீது உட்பகை கொண்டுள்ளான் என்னுஞ் செய்தி அவளுக்குச் சிறிதுந் தெரியாது.

ஒருநாள் காளன் பத்திரையைப் பார்த்து, "ஊருக்குப் புறம்பேயுள்ள மலையின்மீது புத்ததேவனுடைய

கோயில் இருக்கிறது. அத்தேவனுடைய திருவருளால் தான் நான் உயிர்பிழைத்தேன். அத்தேவனை ஒரு நாளைக்கு நாம் இருவருஞ்சென்று வழிபடுதல்வேண்டும் என்று நான் உறுதிகொண்டுள்ளேன். இன்று சென்று நாம் அத்தேவனை வழிபட்டு வருவோம். நீ உன்னை அழகு செய்துகொண்டு என்னுடன் புறப்படுவாயாக" என்று கூறினான். காளனது வஞ்சக எண்ணத்தைச் சிறிதும்உணராத பத்திரை அவன் வேண்டுகோளுக்கு இணங்கினாள். தன்னை அழகு படுத்திக்கொண்டு காளனுடன் புறப்பட்டாள். இருவரும் மலையின் முடியை அடைந்தனர். அந்த மலை மிக உயர்ந்தது. மலையின் முடியிடம் நிலத்தை நோக்கிச் சரிவாக இல்லாமல் செங்குத்தாக இருந்தது. ஒருவர் மலையின் முடியிலிருந்து கீழேவிழுந்தால் அவர்களுடைய எலும்புகூடத் தூளாகிவிடும். மலைமுடியை அடைந்த பத்திரை அச்சத்தால் நடுங்கினாள். மலையின் மேல் கோயில் ஒன்றும் இல்லை.

காளன் மொழி

காளன் பத்திரையைப் பார்த்து, 'ஓ செருக்குக் கொண்ட பெண்ணே! நீ அன்றொருநாள் இரவு என்னைக் கள்ளனென்றும், சிறையிலிருந்தவனென்றும், கெட்டலைந்தவனென்றும் இகழ்ந்துரையாடினையே! நினைவிருக்கிறதா? அதன்பொருட்டு உன்னை இங்கிருந்து கீழே உருட்டித்தள்ளிக் கொலைசெய்யப்போகிறேன். அதன்பொருட்டுத்தான் உன்னை இங்கு அழைத்து வந்தேன். நான் பொல்லாதவனென்பதை நீ உணர்ந்திருந்தும் என்னை இகழ்ந்துரைத்தாயல்லவா? உன் உயிர் மீது நீ வைத்திருக்கும் அவாவை இப்பொழுதே விட்டுவிடு' என்று கூறினான்.

தற்கொல்லியை முற்கொல்லுதல்

காளன் உரையைக் கேட்ட காரிகை திடுக்குற்று நடுங்கினாள். பத்திரை பல நூல்களைப் படித்தவள்: அறிவிற் சிறந்தவள். 'தன்னைக் கொல்லுமாறு வருவது பசுவாக இருந்தாலும் அதனை ஒருவன் கொன்று தன்னுயிரைக் காப்பாற்றிக்கொள்வது தவறாகாது' என்பது சிலர் முடிபு. அந்த முடிபில் பத்திரை அழுத்தமான பற்றுக்கொண்டவள். உயிரைக் காப்பாற்றி, உயர்ந்த இன்ப வாழ்வில் வைத்த நம்மையே கொல்ல எண்ணும் இந்த நன்றி கெட்ட பன்றியை, நாம் முன்னுற் கொன்று தொலைக்கவேண்டும் என்றுமுடிவு கொண்டாள். அவள் காளனைப் பார்த்து, 'ஓ அன்பு மிக்க தலைவரே! நான் அன்று இரவு உம்மை விளையாட்டாகத்தானே இகழ்ந்துரைத்தேன். அதனை நீர் ஒரு குற்றமாகவா எடுத்துக்கொண்டீர்? நான் உம் மீது பெருங் காதல் கொண்டு முழு உயிரையும் வைத்திருப்பதை நீர் அறியமாட்டீரா?, என்றாள்.

காளன், பத்திரை கூறிய மொழிகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், 'நீ வீணாகப் பேசுவதில் யாதும் பயன் இல்லை. நான் உன்னைக் கொல்லப்போவதில் சிறிதும் ஐயமில்லை. நீ வணங்க வேண்டிய தெய்வத்தை வணங்கிக்கொண்டு இறப்பதற்குத் தோதாக இரு' என்றான்.

பத்திரை காளனைப் பார்த்து, 'எனக்கு உம்மை விட வேறு தெய்வம் இல்லை. நீர்தாம் எனக்குத் தெய்வம்; உம்மை மூன்றுமுறை வலம்வந்து வணங்குகிறேன். அதற்குப்பின் நீர் என்னைக் கீழே தள்ளிக் கொல்லலாம்' என்று கூறினாள்.

பத்திரை தன்னை உண்மையாகவே வணங்கி வலம் வர விரும்புகிறாள் என்று எண்ணினான்; 'உன் விருப்பப் படியே வலம்வந்து வணங்கிக்கொள்'என்று கூறி விட்டு நின்றான் பத்திரை இரண்டுமுறை காளனைச் சுற்றி வலமாக வந்தாள். மூன்றாவது முறை தன் முழு ஆற்றலையுங்கொண்டு ஊக்கிக் காளனைப் பிடித்துக் கீழே தள்ளினாள்.

காளனது உடல் கருங்கற்பாறைகளின் மேலே 'கட கட கட'என்று உருண்டு நிலத்தின்மீது விழுந்து சிதறியது. பிறருக்குக் கேடு நினைத்த காளன் தானே அக்கேட்டுக்கு உள்ளானான்.

பத்திரை தன் காதலனின் கொடிய சாவைக் கண்களாற் பார்த்துக்கொண்டு கொல்லிப் பாவையாக நின்றுகொண்டிருந்தாள். அவள் உள்ளம் காளன் அழிவைக் கண்டு கலங்கியது. தற்கொல்லியை முற்கொன்றதற்காக அவளுள்ளம் ஒருகணப்போது மகிழ்ந்த தாயினும், 'அந்தோ! கணவனைக் கொன்ற கள்ளி யானேனே' என்று உள்ளம் நைந்தாள். பத்திரை இவ்வாறு கணவனைக்கொன்றவள் என்பதை, நீலகேசியோடு பத்திரை சொற்போர் செய்தபோது நீலகேசி,

"பருவரல்ஒன்று இலன்தாயைப் பழுப்பறித்தான் தலைவன்இவள்
கருவரைமேல் தன்கணவன் காளனையும் கவிழ்த்திட்டாள்
இருவரையும் போல்வார்இவ் விருநிலத்தின் மேல்எங்கும்
பெருவழியார் பேரருளார் பிறர்யாரே எனாக்காள்"

—நீலகேசி, 192-ஆம் பாட்டு.

என்று கூறி இகழ்வதாலும் நாம் தெரிந்துகொள்ளலாம்.

பத்திரை துறவு

கணவன் எத்தகைய தீயவனாகினும், அவனுடைய இறப்பைக் குறித்து வருந்துதல் நம்நாட்டுப் பெண்க

ளுடைய வழக்கமாகும். கணவனைக்கொன்று பழி தீர்த்துக்கொண்ட பத்திரை இல்லறவாழ்வை வெறுத்தாள். தானும் இறந்துபோகலாமா என்று எண்ணினுள். தற்கொலை புரிந்துகொள்வது பெருந் தீவினையாகுமென்று நூல்களிற்படித்தது அவளுக்கு நினைவில் இருந்தது. ஆகையால், அவள் தற்கொலைசெய்துகொள்ளும் எண்ணத்தை விட்டுவிட்டாள். புத்தத் துறவிகள் தங்கியிருக்குந் தவமடத்தையடைந்தாள். துறவுபூண்டாள்.

குண்டலகேசி

பௌத்தமதத்தில் சேர்ந்தவர்கள் தலைமயிரைக் களைந்து மொட்டையடித்துக்கொள்ளுதல் வேண்டும். அவ்வாறே பத்திரையின் தலைமயிரையுங் களைந்து மொட்டையடித்துவிட்டார்கள். மீண்டும்பத்திரைக்குத் தலைமயிர்வளர்ந்து சுருட்டையாகத் தொங்கியது. மயிர்சுருண்டு குண்டலம்போல வளைந்து தொங்கியபடியால் அவளுடையபெயர் 'குண்டலகேசி' என்று காரணப்பெயராக வழங்கத்தொடங்கியது. குண்டலம் என்றால் வளைவு; கேசம் என்றால் மயிர். பத்திரை என்னும் இடுகுறிப்பெயரையும் இப்பெயருக்கு முன்னுற் சேர்த்துப், பத்திரா—குண்டலகேசி என்றும் வழங்குவார்கள்.

சொற்போர்

பௌத்தமதத்திற் சேர்ந்த குண்டலகேசி பௌத்தர்களிடம் சமயநூல்களையும் தருக்கநூல்களையும் கற்றுணர்ந்தாள். சமயக்கொள்கைகளைப் பற்றிச் சொற்போர் நிகழ்த்துவதில் மிகுந்த தேர்ச்சியடைந்தாள். பல இடங்களினுஞ் சென்று, நாவன்மரம் நட்டுச்

சொற்போர் நிகழ்த்தி வெற்றிபெற்ருள். அந்தக் காலத்திலே சொற்போர் நிகழ்த்த விரும்புவோர் ஊருக்குப் பொதுவான ஓரிடத்திலே நாவன்மரக்கிளை ஒன்றை நட்டுவைப்பார்கள். சொற்போர் செய்யக்கூடிய அறிஞர்களைத் தம்முடன் சொற்போர் செய்யவருமாறு அழைப்பார்கள். சொற்போர் செய்தற்குத் தகுதிவாய்ந்தவர்கள், எதிர்க்கத்தக்கவர்கள் நட்டுவைத்துள்ள நாவற்கிளையைப் பிடுங்கியெறிந்து விடுவார்கள். அவ்வாறு பிடுங்கியெறிந்துவிட்டால் சொற்போர் நிகழும்.

நாவற்கிளை நடுதல்

ஒருநாள் குண்டலகேசி ஓர் ஊரையடைந்தாள். அவ்வூரில் தன்னேடு சொற்போர் செய்யத்தக்கவர்கள் யாரேனும் இருக்கிருர்களோ என்று அறியவிரும்பினுள். ஊருக்குப் பொதுவான ஓரிடத்திற்குச் சென்ருள். மணலைக் குவித்தாள். நாவற்கிளை ஒன்றை நட்டாள். பிறகு தான் உணவு கொள்வதற்காக வீடுகள் தோறுஞ் சென்ருள்.

சாரிபுத்தர்

அச்சமயத்திலே புத்தர் தம்முடைய மாணவர்களுடன் அவ்வூருக்கு வந்தார். புத்தருடைய மாணவர்களில் ஒருவராகிய சாரிபுத்தர் என்பவர் ஊருக்குள் சென்ருர். பொதுஇடத்தில் நாவற்கிளை நட்டிருப்பதைக் கண்டார். அங்கிருப்பவர்களை உசாவி அது யாரால் நடப்பெற்றுள்ளது என்று உணர்ந்துகொண்டார். சிலரைக்கொண்டு அதனைப் பிடுங்கி யெறியுமாறு செய்துவிட்டு அங்கு அமர்ந்திருந்தார்.

சாரிபுத்தருடன் சொற்போர்

உணவு கொள்ளச் சென்ற குண்டலகேசி திரும்பி வந்தாள். தான் நட்டுவைத்த நாவற்கிளை பிடுங்கி யெறியப்பட்டிருத்தலைக் கண்டாள். அதனைப் பிடுங்கி யெறிந்தவர் சாரிபுத்தர் என்று அறிந்தாள். அவ்வூர்ப் பெரியார்களை யழைத்து அவை கூட்டுமாறு செய்தாள். அவையுங் கூட்டப்பெற்றது. இருவருக்கும் நீண்ட நேரஞ் சொற்போர் நடைபெற்றது குண்டலகேசியின் கேள்விகட்கெல்லாம் சாரிபுத்தர் பதிலளித்தார். சாரி புத்தர் கேள்விகளுக்குக் குண்டலகேசி பதிலுரைக்கத் தெரியாமல் விழித்தாள். பிறகு அவள் புத்தரை அடைக்கலமாகப் புகுந்தாள்.

நீலகேசியோடு சொற்போர்

குண்டலகேசி பலவிடங்களுக்குஞ் சென்று புத்த மதக்கொள்கைகளைப் பரப்பிச் சொற்பொழிவு செய்து கொண்டும், சொற்போர் செய்துகொண்டுந் திரிந்தாள். ஒருநாள் நீலகேசியைக் கண்டாள். நீலகேசிக்குங் குண்டலகேசிக்குஞ் சொற்போர் நிகழ்ந்தது. நீலகேசி சைனமதக் கொள்கையை நாட்டிச் சொற்போர் செய் தாள். அச்சொற்போரின் இறுதியில் குண்டலகேசி தோற்றாள் என்று நீலகேசி நூல் கூறுகிறது.

குண்டலகேசி இறுதி

குண்டலகேசி பௌத்தசமயத்தை உலகெங்கும் பரப்பித் தொண்டுசெய்துகொண்டு நீண்டநாள் இருந் தாள். இறுதியிற் புத்தருடைய திருவடியை அடைந் தாள்.

---

# குண்டலகேசிச் செய்யுட்கள்

## உடல் நிலையாமை

பாளையாந் தன்மை செத்தும் பாலனுந் தன்மை செத்தும்
காளையாம் பருவஞ் செத்தும் காமுறும் இளமை செத்தும்
மீளும்இவ் வயது மின்னே மேல்வரும் மூப்பும் ஆகி
நாளும்நாம் சாகின் றேமால் நமக்குநாம் அழாத தென்னே.

## அவாவுக்கு அளவில்லை

வகைஎழில் தோள்கள் என்றும் மணிநிறக் குஞ்சி என்றும்
புகழ்எழ விகற்பிக் கின்ற பொருளில்கா மத்தை மற்றோர்
தொகைஎழுங் காதல் தன்னால் துய்த்துயாம் துடைத்தும் என்பார்
அகையழல் அழுவந் தன்னை நெய்யினால் அவிக்க லாமோ.

# குண்டலகேசிக் கதையால் அறியும் அறநெறிகள்

(க) காதல் என்பது மிகுந்த ஆற்றலமைந்தது.

(உ) ஊழ்வினை தன் பயனை ஊட்டாமல் விடாது.

(ங) கீழ்மக்கள் எவ்வளவு பேருதவியையும் ஒரு பொருளாக மதிக்கமாட்டார்கள். அவர்களுடைய கீழ்மைக் குணமே மேலோங்கி நிற்கும்.

(ச) ஆடவர்களைப்போலப் பெண்டிருக்கும் அஞ்சாமையும் ஆண்மையும் உள்ளன.

---




காளிகோயிலில் சந்திரமுனிவர் அறங்கூறுதல்

[பக்கம் 49]

# நீலகேசி

## சமுத்திரராசன்

பாஞ்சாலநாடு எல்லா வளங்களாலும் இனிது சிறந்து விளங்கியது. அந்நாட்டைச் சமுத்திரராசன் என்னும் பெயருடைய மன்னன் இனிது அரசாட்சிசெய்து கொண்டிருந்தான். அவன் மிகுந்த ஆற்றலுடையவன். ஆற்றலால் அவனை அரிமா என்று கூறலாம். தன் ஆணையைக் கடைப்பிடித்தவரை அவன் ஒறுக்காமல் விடமாட்டான். தன் குடிகளைப் போற்றிப் பாதுகாப்பதில் அம்மன்னன் தாயைப் போன்றவன். தன் பகைவர்களை அழித்துத் தொலைப்பதில் தீயைப்போன்றவன்.

## பண்டாரவர்தனு

அந்தச் சமுத்திரராசன் அரசுபுரிந்திருந்த தலைநகரின் பெயர் பண்டாரவர்தனு. அந்நகர் மிக உயர்ந்த மதிலையுடையது. பலவகை ஒலிகளும் ஒருங்கே அமையப்பெற்ற அந்நகரத்தின் ஒலி கடல் ஒலியைப்போன்றிருக்கும். அகிற்புகை எப்பொழுதும் புகைக்கப் பெறுவதாலும், பலவகை மணப்பொடிகள் இறைக்கப்பெறுவதாலும், கொடிகள் கட்டப்பெற்றுள்ளமையாலும் அந்நகர் எப்பொழுதும் இருள் சூழ்ந்ததாக விளங்கும்.

## பலாலையம்

பண்டாரவர்தனு நகரையொட்டி இடுகாடு ஒன்று விளங்கியது. அவ்விடுகாட்டின் பெயர் பலாலையம். அந்த இடுகாட்டில் இராப்பகல் எந்த நேரத்தினும் பேரொலி மிகுந்திருந்தது. பலவகை மரங்களும் நெருக்க

மாகப் பொருந்தியிருந்தபடியால் இராப்பகல் எப்பொழுதும் இருள் சூழ்ந்திருந்தது. அங்குப் பேய்களும் கூகை கோட்டான் முதலியவைகளும் எப்பொழுதும் அலறிக்கொண்டிருக்கும். அந்த இடத்தை மக்கள் மனத்தால் நினைப்பதற்குக்கூட அஞ்சுவார்கள்.

பாடையிற் கட்டின மாலைகளாலும், வெள்ளிய தலையோடுகளாலும், கொள்ளிகளாலும், பாடைத்துணி கழி முதலியவைகளாலுமே அந்த இடம் நிறைந்திருக்கும். காக்கை யொலியும் பேய்க் கத்தலுமே மிகுந்துள்ள அங்கு பிணப் படுக்கைகளின்மேற் பேய்கள் படுத்திருக்கும். அந்த இடத்திற்கு யாருந் துணிந்து செல்லமாட்டார்கள். செல்லவேண்டியதாக நேரிடின் பலர் ஒன்றுகூடி மிகுந்த அச்சத்துடன் செல்வார்கள்.

### காளி கோயிலுஞ் சந்திரமுனிவரும்

அஞ்சத்தக்க அத்தகைய இடத்திலே காளிகோயில் ஒன்று இருந்தது. அக்காளி கோயிலுக்கு அண்மையில் ஒரு முனிவர் தவஞ்செய்துகொண்டிருந்தார். அவருடைய பெயர் சந்திரமுனிவர். அவர் பஞ்சாத்திகாயங்களை இலௌகீகமும் உலகோத்தரமுமாகிய மேற்கோள்களால் உறுதிசெய்துணர்ந்தவர். உயிர்களிடத்திலே தண்ணளிமிகுந்தவர். மற்ற உயிர்கட்கு வருந்துன்பத்தை தமக்கு வந்ததாக எண்ணி நீக்கும் இயல்புடையவர். உயிர்ப்பலிகளைச் சிறு தெய்வங்கட்கோ பெருந்தெய்வங்கட்கோ கொடுப்பதை அறவே வெறுப்பவர்.

### மக்கள் பலியிட வருதல்

சந்திரமுனிவர் தவஞ் செய்துகொண்டிருக்கும் போது நகரத்துமக்கள் காளிதேவிக்குப் பலியிடவெண்ணினர். கணக்கற்ற ஆடுகளைக் கோவிலுக்கு ஓட்டிச்

சென்றனர். பலியிடுவதற்குமுன் செய்யப்பெறவேண்டிய வழிபாடு முதலியவைகளைச் சிறப்பாகச்செய்தனர். மக்கள் ஆட்டுக் கூட்டத்துடன் வந்திருத்தலைச் சந்திர முனிவர் கண்டார். பலிகொடுப்பதற்காகத்தான் கொண்டுவந்திருக்கிறார்கள் என்று உணர்ந்தார். அம்மக்களைப் பார்த்து, 'நீங்கள் பல ஆடுகளைப் பலிகொடுக்கக் கொண்டுவந்திருப்பதற்குக் காரணம் யாது? கூறுங்கள்' என்றுகேட்டார்.

பலியிடவந்த மக்கள் பலியிடுவதற்குக் காரணங் கூறுதல்

மக்கள் சந்திரமுனிவரைப் பார்த்து, 'எங்கள் அரசனுடைய பட்டத்துத்தேவி நீண்டகாலம் மக்கட்பேறு அற்றிருந்தாள். அவ் வரசி பட்டத்திற்குரிய மகனைப் பெற்றால், பலிகொடுப்பதாக இக் காளிதேவியை வேண்டிக்கொண்டோம். எங்களுடைய வேண்டுகோள் நிறைவேறியது. அரசி பட்டத்திற்குரிய மைந்தனைப் பெற்றாள். எங்கள் வேண்டுகோளை இனிது நிறைவேற்றிய தேவிக்கு இவ் வாடுகளைப் பலிகொடுக்கப் போகிறோம்' என்று கூறினார்கள்.

சந்திரமுனிவர் அறநெறி கூறுதல்

மக்கள் கூறியவைகளைக்கேட்டுச் சந்திரமுனிவர் வருந்ினார். "உயிர்கள் தாம் தாம்செய்த நல்வினை தீவினைகட்கு ஏற்ப இவ் வுலகத்தின்கண்ணே உடல் எடுத்து உழலுகின்றன. இத் தகைய நிகழ்ச்சிகளில் சிறிய தெய்வங்களால் ஆவது ஒன்றும் இல்லை. அரசனுக்கு மகன் பிறந்ததற்காக நீங்கள் கொடுக்கும் விலங்குப்பலியை இத் தெய்வம் மகிழுமானால், மண்ணால் செய்யப்பட்ட ஆட்டுவடிவங்களையும் இத் தெய்வம் பலியேற்று மகிழு

மன்ருே? அவ்வாறு செய்தால் செய்கின்றவர்கட்குத் தீவினையும் ஏற்படாது. கொலைத்தொழில் புரிபவர்களை உலகம் கொடியவர்கள் என்று கூறும். அறநூல் செய்த பெரியவர்கள் கொலைத்தொழில் புரிதல் மிகக் கொடியதென்றும், ஓர் உடலிற்செய்த கொலைவினை பலவுடல்களைத் தொடர்ந்து வருத்துமென்றும், கொலைத் தொழிலைக் கனவிற்கூட நினைத்தல் கூடாதென்றும் கூறியிருக்கிருர்கள். ஆகையால், நீங்கள் இந்த வாயற்ற ஆடுகளைக் கொலைபுரியாமற் கொண்டுபோய் உங்கள் மக்களைப்போலக் காப்பாற்றுதல் வேண்டும்'' என்று கூறிஞர்.

மேலும் அந்த மக்களைப்பார்த்து, 'நீங்கள் இம்மையிலும் மறுமையிலும் நன்மை அடையவேண்டுமானுல், மற்றும் பல தீச்செயல்களை நீக்குதல்வேண்டும். அவைகளைக் கூறுகிறேன்கேளுங்கள்:

கொலைத்தொழிலைப்போலப் பொய்யுரை புகலலுந் தீது. ஆதலால் அதனையும் ஒழிதல்வேண்டும். பிறர்மனை நயத்தலும் ஆகாது. ஒருவர் பொருளை அவர்கள் அறியா வண்ணம் கைப்பற்றிக்கொள்ளுதலும் கொடிய தீவினை தான். எனவே, இந்தப்பொல்லாத செயல்கள் எல்லாவற்றையும் அறவே ஒழித்தல்வேண்டும். முழுமுதற் பொருளாகிய கடவுளிடத்திலே என்றும் உள்ளத்தை நிலை நிறுத்தவேண்டும். அவ்வாறு செய்வீர்களாயின் விண்ணுலக வாழ்வு நுங்கட்கு எளிதாகக் கிடைக்கும்'' என்று கூறிஞர்.

மக்கள் நல்லறிவு பெறுதல்

சந்திரமுனிவர் சாற்றிய அறவுரைகளைக் கேட்ட மக்கள் நல்லறிவு பெற்றனர். முனிவர் உரைத்தது உண்

மையே என்று துணிந்தனர். முனிவரைப் பணிந்தனர். 'பெரியீர்! தாங்கள் கூறியவை முற்றிலும் உண்மையே! எங்களுடைய பழவினைகள் ஒழியவேண்டும்' என்றனர். 'பலிகொடுப்பதற்குக் கட்டிவைத்திருக்கும் ஆடுகளைக் கொண்டுபோய்ப் பாதுகாக்கின்றோம்; அதனால் அறத்தையும் பாதுகாத்தவர்களாவோம்' என்றுகூறி ஆட்டையும் அறத்தையும் உடன்கொண்டு சென்றனர்.

பேய்கள் சீற்றம்

சந்திரமுனிவர் உரையால் மக்கள் ஆடுகளைப் பலி கொடுக்காமற் சென்றுவிடவே; காளிக்குங்கூளிகளுக்குங் கடுஞ்சின முண்டாயிற்று. அவைகள் பலவாறு கொக்கரித்துக் கூத்தாடின. 'நமக்குவந்த பலியை இந்தச்சிறு முனிவன் கெடுக்கலாமா? இவனை எளிதில் விடக் கூடாது. இவனுடைய ஆணவத்தை அடக்கவேண்டு மென்று துள்ளிக்குதித்தன. பலவாறு கூச்சலிட்டன.

முனிவரோ தவத்தினால் ஆற்றலிற் சிறந்து விளங்கினார். பேய்களால் அவரைஒன்றுமேசெய்யமுடியவில்லை. கொல்லா நோன்புடைய சந்திரமுனிவரின் அண்மையில் நெருங்குதற்குக்கூட அப்பேய்களால் இயலவில்லை. முனிவரின் தவஆற்றல் அவ்வாறு சிறந்து விளங்கியது.

காளியின் தலைமையில் கூளிகளனைத்தும் ஒன்று கூடி எண்ணமிட்டன. 'இந்த முனிவனை நம்மால் ஒன்றுஞ் செய்யமுடியாது. வேறு பெரும் பேயைத் தேடி அழைத்துக்கொண்டு வந்து அப்பேயைவிட்டு ஒறுத்தல் வேண்டும்' என்று பேய்களின் கூட்டத்தில் ஒரே மனதாக முடிவு செய்யப்பட்டது.

பேய்கள் பெரும் பேயைத் தேடிச் செல்லுதல்

'பிறகு பேய்கள் காலந்தாழ்த்தல் கூடாது; விரைவிற்சென்று ஆற்றல்மிக்க பேயைத் தேடிவருதல் வேண்டு'மென்று நாற்றிசைகளிலும் புறப்பட்டன. நாடுகடோறுந் தேடி முயன்றும் நல்ல ஆற்றலுடைய பெரும்பேயைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இறுதியில் தென்னாட்டில் *'நீலகேசி' என்னும் பேயைக் கண்டு பிடித்தன.

நீலகேசியைக்கண்டு வேண்டுதல்

பெரும்பேயைக் கண்டுபிடித்த சிறுபேய்கள் அதன்முன் விழுந்து பலவாறு தொழுது போற்றின. பிறகு 'எங்கள் நாட்டிலே எங்கள் இருப்பிடத்திற் கருகில் சந்திரமுனிவன் என்று பெயருடைய ஒரு முனிவன் இருக்கிறான். எங்கட்குப் பலிகொடுக்குமாறு மக்கள் கொண்டுவந்த ஆடுகளைப் பலியிடாவாறு அவன் தடுத்துத் திரும்பக் கொண்டுபோகுமாறு செய்துவிட்டதுடன், இனிமேல் என்றுமே பலிகொடாதபடியும் அவர்களுக்கு அறிவு கூறிவிட்டான். அவன் தவத்திற் சிறந்தவனாக இருப்பதால் அவனை எங்களால் ஒன்றுஞ் செய்யமுடியவில்லை. நாங்கள் உனக்கு அடைக்கலம் புகுந்தோம். நீதான் அந்த முனிவனைத் தண்டித்து எங்களைப் பாதுகாத்தருளுதல் வேண்டும்' என்று அழுது தொழுது நின்றன.

---

*திருவாலங்காட்டில் திரிந்து வணிகன் உயிரைப் போக்கிய நீலிதான் இந்த நீலகேசியா? அல்லது வேறு நீலகேசியா? என்பது விளக்கமாகத் தெரியவில்லை. பழையனூர் நீலி என்பாள் திருவாலங் காட்டிற் பேயாகத்திரிந்து அவ்வழியேவந்த தன் கணவனைக் காஞ்சி நகர் வரை பின்பற்றிச்சென்று கொன்றதாகக் கதை வழங்குகின்றது.

நீலகேசி வருதல்

குருதிப்பலியை முனிவர் தடுத்துவிட்டார் என்று கேள்வியுற்றதும் நீலகேசிக்குஞ் சினமுண்டாயிற்று. 'நீங்கள் அழுதல்வேண்டாம். நான் அம்முனிவனைக் கொன்றுவிடுகிறேன்;' என்று கூறி அப்பேய்களுடன் பாஞ்சாலநாட்டை யடைந்து, பலாலையத்தைச் சேர்ந்தாள். முனிவரைக் கண்டாள்.

நீலகேசி சந்திரமுனிவரை அச்சுறுத்துதல்

சந்திரமுனிவருடைய இருப்பிடத்தை யடைந்த நீலகேசி அஞ்சத்தக்கவாறு பல வடிவங்களை யெடுத்தாள். சந்திரமுனிவரிடம்வந்து அச்சுறுத்தினாள். விழுங்கிவிடுவதாக உரைத்தாள். மலைமீது தூக்கிச்சென்று உருட்டிவிடுவதாகக் கூச்சலிட்டாள். நிலம் அதிரும்படியாகக் காலாற்புடைத்தாள். 'ஆ' என்று வாயைத் திறந்துகொண்டு வந்தாள். கொள்ளிவாய்ப் பேய்போலச் சுழன்றாள். கற்களைப் பொறுக்கி வீசினாள். வில்லைவளைத்துக் கணைகளைச் செலுத்தினாள். மற்போர் செய்து அடித்துட் புரட்டிவிடுகிறேன் என்றாள். டால்லினாற் பல பிணங்களைக் கிழித்துக்காட்டினாள். மார்பிற் புகுந்து முதுகினூற் புறப்படுவேன் என்றாள். யானையாகவந்து சினந்தாள். கொடிய வரிப்புலியாகப் பாய்தற்குவந்தாள். வலிமைதங்கிய இடபக் காளையாக முட்டிக் கிழிப்பேன் என்று வந்தாள். கொடிய சினம் பொருந்திய அரிமாவாக வந்தாள்.

மயக்கக் கருதுதல்

சந்திரமுனிவரோ எதற்குஞ் சற்றேனும் அஞ்சவில்லை. நீலகேசி தன் ஆற்றல் முழுவதுஞ் சந்திரமுனிவர் முன்பு குன்றிப்போனதைக் கண்டு நாணினாள்.

இம்முனிவனை அச்சுறுத்திப் பணியவைத்தல் நம்மால் இயலாது. இம்முனிவனை மயக்கித் தவத்தினையழித்தல் வேண்டும் என்று முடிவுசெய்தாள். அந்நகரத்தரசனுக்குக் காமலேகை என்னும் பெயருடைய மகள் ஒருத்தி இருந்தாள். அவள் அழகிற் சிறந்தவள். திருமகளைப் போன்றவள். அம்மாதைப்போல நீலகேசி வடிவங்கொண்டாள். முனிவர் மயலடையும்படியான ஒயிலுடன் அவரிடம் வந்தாள். தனக்கு அருள்புரிதல் வேண்டும் என்று கூறி நடித்தாள். தன் முன் நடிப்பது அரசன் மகள் அல்லள் என்றும், நீலகேசிப் பேயே என்றும் முனிவர் தமது மெய்யறிவால் அறிந்தார்

அவளைப்பார்த்து, 'நீ அரசனுடைய மகளாயின் தோழிப்பெண்களோடு பலவகை விளையாடல்களைப் புரிந்து பொழுதுபோக்குவதன்றோ முறை? அதனை விட்டுவிட்டுப் பேய்கள் மிகுந்த இடுகாட்டிற்குவந்து வீணாக ஏன் துன்பப்படுகிறாய்? உலகப்பற்றுக்களை முற்றுந் துறந்தவர்கட்குத்தான் இந்த இடம் ஏற்றதே தவிர, நின்னைப்போன்ற மங்கையர்கட்கு இந்த இடம் ஏற்றதன்றே!' என்று சந்திரமுனிவர் கூறினார். மேலும் அவளைப்பார்த்து 'நீ என்னிடம் வீணாக நடிப்பதிற் பயனில்லை. நீ, நீலகேசி என்னும் பேய்' என்றும் உரைத்தருளினார். தன் உண்மையையுணர்ந்து கூறிய சந்திர முனிவரின் பேராற்றல் நீலகேசிக்குப் பெரும் வியப்பையளித்தது. தன் செயலும் நடிப்பும் இவரிடஞ் சிறிதும் பயன்பெறமாட்டா என்பதையும் நீலகேசி உணர்ந்தாள்.

சந்திரமுனிவர் நீலகேசிக்கு அறவுரை சாற்றுதல்

'தனக்கு நல்லறவுரைகள் கூறவேண்டு'மென்று நீலகேசி சந்திரமுனிவரை வேண்டிக்கொண்டாள்.

சந்திரமுனிவர் நீலகேசியை இருக்குமாறு கூறினார். அவளும் அவ்வாறே அமர்ந்தாள். முனிவர் நீலகேசிக்கு அறவுரைகள் பல மொழியலானார். உலகத்திலுள்ள பலவகைப் பிறப்புக்களையும் விரித்துரைத்தார். பேய்களாகிய உங்களைத் தவிர மற்றவர்களனைவரும் உயர்ந்த நிலையில் இருக்கிறார்கள். நீங்கள் தாம் மிகவும் இழிந்த நிலையில் இருக்கிறீர்கள். நீங்கள் மிகுந்த பசியை உடையவர்கள். பிறருக்குப் பணிசெய்தலாகிய துன்பங்களையுடையவர்கள் பிறருக்குத் தொல்லையை உண்டுபண்ணுந்தீக்குணம் உங்களிடந்தான் இருக்கிறது' என்று கூறி மெய்ப்பொருளை உரைத்தருளினார்.

மேலும், 'நீ என்னை மயக்கி எனது தவத்தினை அழிக்குமாறு அழகிய உருவத்தைக் கொண்டுவந்தாய். நான் உன்னுடைய அழகையுஞ் செயலையுங்கண்டு ஏமாந்துபோவேன் என்று எண்ணினாய். எல்லாவற்றையும் வெறுத்தொதுக்கிவிட்டு, இப்புறங்காட்டில் இருக்கும் நான், உன்னுடைய மாயக் கூத்தால் மயங்குவேனோ?' என்றார்.

நீலகேசி சந்திரமுனிவரைப் பணிந்தாள். 'வெறுக்கத்தக்க செயல்களைப் புரிந்தாலும், தாய் தன்னுடைய சேயை வெறுத்து ஒதுக்குவாளோ? தாயைப்போன்ற தாங்கள், பேயாகிய யான் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்துக்கொள்ளுதல்வேண்டும்' என்று பணிந்தாள்.

வெள்ளமாரி தரித்தோய்நீ வினையின் வாயில் அடைத்தோய்நீ
உள்ளமாட்சி உடையோய்நீ உயப்போம் வண்ணம் உரைத்தோய்நீ
நள்ளென் யாமத் தியான்செய்த நவைகள் எல்லாம் நனிகண்டும்
எள்ளல் இல்லாப் பெரியோய்நின் இணையில் பாதம் அணைவல்யான்.

மூடம் மூன்றும் உரைத்தோய்நீ முரண்செய் தோற்றம் முனிந்தோய்நீ
வீடும் கட்டும் விரித்தோய்நீ வினையின் இன்பம் வெறுத்தோய்நீ

காடு கிளர்ந்து காட்டியான் கலக்க ஒன்றுங் கலங்காத
பாடற் கரிய பெரியோய்நின் பழிப்பில் பாதம் பணிவல்யான்.

அல்லற் பிறவி அகன்ருேய்நீ ஆசை வெவ்வேர் அறுத்தோய்நீ
வெல்லற் கரிய அனங்கனைமெய் வெண்ணீருக வெகுண்டோய்நீ
கொல்லக் கருதி வந்தேனைக் குணங்க ளாலே வணங்குவித்த
சொல்லற் கரிய பெரியோய்நின் தோமில் பாதம் தொழுவல்யான்.

என்று புகழ்ந்து போற்றினுள். 'எனக்கு நல்வழியைத் தாங்கள் உரைத்தருளினீர்கள். தீவினையாட்டியாகிய நான் இனிச் செய்யவேண்டியது யாது?' என்று கேட்டாள்.

சந்திரமுனிவர் நீலகேசியைப் பார்த்து, 'நீ செய்த தீவினை அகலுமாறு சினவரன் எழுந்தருளியுள்ள கோயில்கள்தோறுஞ்சென்று அவனைப்போற்றுவாயாக' என்று உரைத்தருளினுர்.

குண்டலகேசியோடு சொற்போர்

நீலகேசி தன் ஆசிரியரான சந்திரமுனிவர் சாற்றிய படி, பலவிடங்கட்குஞ் சென்று அருகனைப்போற்றினுள். அவன் புகழ்களைப் பலவாருகப் பாடினுள். பல விடங்களிலுஞ் சென்று பௌத்தசமயத்தை மறுத்துச் சொற்போர் செய்தாள். தென்பாஞ்சால நாட்டின் தலைநகராகிய காம்பிலி நகரை யடைந்தாள்.

குண்டலகேசி பல நாடுகளினுஞ் சுற்றிக்கொண்டு காம்பிலி நகரத்திற்கு வந்திருந்தாள். அவள் பௌத்த சமயத்தைச் சேர்ந்தவள். அரசனுடைய தலைவாயிலில் நாவல்மரக்கொம்பினை நட்டுவிட்டுத் தன்னோடு சொற் போர் செய்யக்கூடியவர்களை எதிர்பார்த்துக் கொண் டிருந்தாள். அரசன் இருவருஞ் சொற்போர் செய்வ

தற்கு ஏற்பாடு செய்தான். இருவரும் ஒருநாள் முழுவதும் சொற்போர் செய்தனர்.

*'புத்தர் தம் தாயைப் பிறந்தபொழுதே கொன்றுவிட்டார்' என்றும், 'குண்டலகேசி தன் கணவனை மலையிலிருந்து தள்ளிக் கொன்றாள்' என்றும் இகழ்ந்து கூறினாள் நீலகேசி. இறுதியிற் குண்டலகேசி தோற்றாள். அரசன் அவளை நகரைவிட்டு வெளியேற்றினான்.

அருக்க சந்திரருடன் சொற்போர்

குண்டலகேசிக்கு அருளுரை கூறியவர் அருக்க சந்திரர் என்னும் பௌத்தப் பெரியரர் என்பதைக் குண்டலகேசி வாயிலாக நீலகேசி உணர்ந்தாள். அந்த அருக்கசந்திரனுருடன் சொற்போர்செய்ய விரும்பி அவர் இருக்குமிடமாகிய உஞ்சை நகரையடைந்தாள். அருக்க சந்திரரோடு சொற்போரிட்டாள்.

'உட்பற்றும் புறப்பற்றும் நீங்கி, உள்ளும் புறம்பும் ஒரே தன்மையாயிருப்பின் வீடுபேறுண்டாகும். இருவகைப் பற்றுமிருந்தால் வீடுபேறு உண்டாகமாட்டாது. மேலும் மேலும் பிறப்பும் இறப்புந்தான் உண்டாகும். புறப்பற்று இருக்கும்போது, அகப்பற்று இல்லையென்பது பொருந்தாது. புகையிருக்குமிடத்திலே தீயிருக்காமற் போகாது. ஆகையால், புறப்பற்றுள்ள இடத்தில் அகப்பற்றும் உண்டாம். வீடு பேறு உண்மையாகவுள்ளதாயினும், அது நினக்குண்டாக மாட்டாது' என்று பலவாறு சொற்போரிட்டு அவரை வெற்றி கொண்டாள்.

*புத்தர் தம் தாயின் வலப்புற மருங்குலாற் பிறந்தார் என்றும், அதனால் அம்மாது ஆறுதினங்கள்வரை வருந்திக் கிடந்து, ஏழாம் நாள் இறந்துவிட்டாள் என்றும் பிம்பசாரகதையிற் கூறப்பெறும்.

மோக்கலனுருடன் சொற்போர்

அருக்கசந்திரனுருக்கு ஆசிரியர் மொக்கலனுர் என்னும் பெரியார் என்று அருக்கசந்திரரால் அறிந்தாள். மொக்கலனுர் என்னும் பெரியார் பதுமபுரம் என்னும் ஊரில் தங்கியிருந்தார். நீலகேசி விண்வழியே சென்று அவரைக் கண்டாள். மொக்கலனுரும் அவரைச் சார்ந்தோருஞ் செந்நிற ஆடை யணிந்து தவக்கோல முடையவர்களாக விளங்கியிருந்தனர். நீலகேசி அவர் களைப் பார்த்து 'உண்மையாகப் பொன்னல்லாத ஒன்று, மேற்பூச்சினுற் பொன்னைப்போல விளங்கிற்றுயினும் உலகத்தவர்கள் அதனைப் போற்றமாட்டார்கள். நீங்கள் கொண்டுள்ள கோலத்திற்குத் தக்க மாண்பு உங்களிடத்தில் இல்லையாயின் உங்களை யாரும் மதிக்க மாட்டார்கள். நீங்கள் பல் விளக்காமலும், நீராடா மலும் இழுக்குமிக்குடைய அழுக்குமெய்யினராக இலங்குகின்றீர்கள். இவ்வாறிருத்தல் கூடாது. உடல் தூய்மையுடையதானுல்தான் உள்ளமுந் தூய்மை யுடையதாகும். வெளித்தூய்மை நீரினுல் ஏற்படு மென்றும் உள்தூய்மை உண்மையினுல் உண்டாகு மென்றும் அறிஞர்கள் கூறியிருக்கிருர்கள்' என்பன முதலிய உரைகளைக் கூறினுள்.

மொக்கலனுர் நீலகேசியைப்பார்த்து, 'நீ இரணி யனைப்போல இங்குவந்து எமக்கு இடரைச் செய்கிருய்; நீயார்? உன்னுடைய பெருமையாது?' என்று உசாவத் தொடங்கினுர். நீலகேசி, தான் குண்டலகேசி, அருக்க சந்திரனுர் ஆகியோரை வென்றவள் என்று கூறிச் சொற்போர் தொடங்கினுள். சொற்போரில் மொக்க லனுர் தோற்றுர். நீலகேசி மொக்கலனுருக்கு ஆசிரியர்

புத்தர் என்பதை மொக்கலனூரால் உணர்ந்து, அவரோடு சொற்போர் செய்வதற்காக அவர் இருக்கும் ஊரை யடைந்தாள். மற்றும் பலரொடு சொற்போர் புரிந்து அவர்களை வெற்றிகொண்டாள். நீண்டநாள் உலகில் இருந்து பிறகு வீடுபேற்றை யடைந்தாள்.

---

## நீலகேசிக் கதையால் உணரும் அறநெறிகள்

(க) உயிர்கட்குப் பலிகொடுத்தலை அறவே வெறுத்தல் வேண்டும்.

(உ) உயிர்கள் தம் வினைக்குத் தக்கவாறு பிறந்திருந்து இன்ப துன்பங்களை நுகருகின்றன.

(ங) தவத்தினர் ஆற்றலுக்குமுன்பு எத்தகைய ஆற்றலும் பயன் படாது.

---

## பயிற்சிகள்

கீழ்க்கண்டவைகளைப்பற்றிப் பத்துவரிகள் எழுதுக

வளையாபதி :

1. சாத்தனும் அந்தரியும் சூழ்ச்சிசெய்தல்.
2. பத்தினி வீட்டைவிட்டு வெளியேறுதல்.
3. காளிதேவிமுன் பத்தினி.
4. ஔவை என்னுந் தவமூதாட்டி.
5. பத்தினியின் வரலாறு.
6. பெரியோர்களின் அறிவுரை.

குண்டலகேசி :

1. காளன்.
2. பத்திரை.
3. காளனது வஞ்சக எண்ணம்.
4. பத்திரையின் சூழ்ச்சி.
5. குண்டலகேசி.

நீலகேசி :

1. பலாலையம்
2. சந்திரமுனிவர் அறநெறி கூறுதல்.
3. நீலகேசி சந்திரமுனிவரை அச்சுறுத்துதல்.
4. மொக்கலனுருடன் சொற்போர்புரிதல்.